இருவரல்லர். பல அறிஞர்கள் தங்களாயுட்காலத்தையும் ஆத்மசக்தியையும் இவ் வகராதியொன்றற்கே யுரிமையாக்கினர். இவ் அறிஞர்களும் ஒருதலைமுறையின ரல்லர்; அடுத்தடுத்து வந்த நான்குதலைமுறையினர் அகராதிக்கென உழைத்துவந்தனர். இங்கிலாந்துதேசத்தினர்மட்டுமன்று இங்ஙனம் உழைத்துவந்தவர். ஆங்கிலம் பேசும் மக்களுள்ள தேசப்பகுதிகளனைத்தும் இயன்றவரை கூட்டுறவு செய்துவந்தன. இந்நூதன ஆங்கிலப் பேரகராதியோடு எவ்வகையானோக்கினும் ஒத்து நிற்கக்கூடிய அகராதிப் பொருள்கள் நமது தமிழன்னையிடத்தே உள்ளன. அவற்றை யறிந்து பயன்படுத்தும் மக்களை அவள் பெற்றிலளென்று உலகம் பழியாமைப்பொருட்டுத் தமிழ்மக்களாயுள்ளார் அனைவரும் ஒருமுகமாக உழைத்தல்வேண்டும். இப் பெருமுயற்சியில், எனது ஆற்றலுக்கேற்றபடி உழைத்துவருகின்றேன். தமிழ் அகராதிக்குரிய மூலநூல்களை யொவ்வொன்றாக வெளியிடக் கருதுகின்றேன். இறைவன் திருவருள் முன்னிற்க.

என்னை யுணர்ந்த விளம்பருவ முற்கொண்டே
யுன்னை யுயிரெனக்கொண் டேரம்பினேன் —மன்னுபுகழ்த்
தெய்வத் தமிழனைநின் சேவடிக்கே யாளாக்கி
யுய்விக்கக் கொள்வா யுளம்.

சென்னை,
20—4—31.

S. வையாபுரிப்பிள்ளை,
தமிழ் லெக்ஸிகன் பதிப்பாசிரியர்.

௨

# அரும்பொருள்விளக்க நிகண்டு.

## காப்பு.

1 மகிழ்ந்துல கெவையும் போற்ற வன்புரங் குன்ற வென்ற
திகப்பர னணங்கோர் பாகத் தெய்வநா யகன்சேய் தந்தி
முகன்றன தடியை [1]யேத்தி மூதரும் பொருள் விளக்க
நிகண்டெனு மணித்தீ பத்தை நிலமிசை நிகழ்த்த லுற்றும். (க)

## பாயிரம்.

2 பொன்னொளிர் கமலப் புத்தே ணறுந்துழாய்ப் பெருமான் போற்றுங்
கன்னியம் புரிசைத் தில்லை நாதன்றாள் கருத்திற் சேர்த்திப்
பன்னரும் பொருள் விளக்கத் தீபிகை பகர்வேன் பாரிற்
செங்நெறி யுளத்தோர் யாருஞ் செவிமடுத் தினிது கேண்மின். (௨)

3 குளிர்மணி வடபீ டிற்கிழ்க் குலவுமெம் மடிக டொன்னாள்
எளிதிலா முதனூல் செப்ப விலக்கண நிலையுங் தூக்காற்
றெளியொரு வழிநூல் செப்பச் [2]சிலர்சார்பு நூலும் போற்றத்
தளிர்பெற விந்நூல் மூன்றுஞ் சகந்தனிற் றிகழ்ந்த தன்றே. (௩)

4 ஆங்கது நிற்கப் பின்னு மலகினா லுகித்த வாற்றிற்
றூங்கொரு சொற்பொ ருட்பல் விதத்தொகை தானென் றுக்கொன்
றோங்கிமிக் குங்கு றைந்து மொத்திடா திருக்கை தன்னாற்
பாங்குயர் சின்னூற் சேரும் பொருள்கூட் டும் பண்பை யெண்ணி.()

5 இலக்கண முழுது ணர்ந்தோ னிறைபி றஞ் சிவாக மத்தின்
றலைக்கடல் முற்றுங் கண்டோன் றெல்லையாந் தில்லை மூதூர்
கலக்கற விளங்கும் பச்சைக் கந்ததே சிகனு மெங்கோன
சொலத்திக ழிகப ரத்தை [3]வேண்டியே தொல்லோர் கேட்க. (௫)

---

பிரதிபேதம்:—[1]வாழ்த்தி, [2]சிலர் சார்பி னூலும், [3]வேண்டிய,

6 மாவியல் சிறக்கும் வீரை மண்டல வன்கான் கேயன்
ரேவண சித்தன் செஞ்சொற் [1]கயாகர னிவராற் சொற்ற
பாவியல் நூற்கூ றோர்சொற் பல்பொருட் டொகையெ லாஞ்சேர்த்
தோவிலா வளஞ்சி றப்ப வொருபெரு நூல தாக. (௬)

7 நவையறு ககா மதி னகர்வீ றெதுகை தன்னால்
நுவலடிக் கிரண்டு மொன்று நண்பொரு ளொருங்கு சேர்த்திச்
சுவைதிகழ் சொல்வி ருத்தத் [2]தொகையெழு நூறு தன்னால்
அவைநலோர் குற்றஞ் சொல்லா ரென்பதை யகத்தி னெண்ணி. (எ)

8 சொற்றன னுருத்து ளிக்குந் தோட்டலர் கடம்பின் றிண்டோட்
கொற்றவேன் முருகன் செந்திற் [3]குமாரவேட் கடிமை பூண்ட
நற்றவ [4]வீரா சார நற்சிவப் பிரகா சன்சேய்ப்
பெற்றிசே ரரும ருந்த தேசிகப் பெயரி னனே. (அ)

9 இருஞ்சகாத் தம்மீ ரைஞ்னூ றிருமூன்று றுடனெண் பத்தஞ்
சொருங்குசித் திரபா னுப்பேர்ச் சமைமகத் திங்க ளொப்பில்
பொருஞ்சிவ நிசிவெள் ளிப்பேர் [5]புனை தினந் தில்லை மன்றிற்
பெருங்குணத் தோர்க்க ரங்கே றற்றநூற் பெற்றி தானே. (௯)

பாயிரம் முற்றும்.

---

(பி-ம்.) [1]கயாதர. [2]தொகைமுவொன் பானூ றெழாய், [3]குமரவேள் லரங்கன் சிக்கோன், [4]விரதா சார.(?) [5]புகறினர்,

# நூல்.

## ககரவெதுகை.

10 அகவலே யழைத்த லாட லான்றவா சிரிப மூப்பேர் ;
தகவறி வுடனொ ழுக்கந் தெளிவுஞ்சற் குணமுஞ் சாற்றும் ;
பகவதி யுமையே [1]துர்க்கை தருமதே வதைப்பேர் பன்னும் ;
முகவுமா ளிகைமு கப்பே மொள்ளுதல் காந்திக் கும்பேர். (௧)

11 உகமென்ப வுரகம் பூமி யூழியே முதலே நாற்பேர் ;
சுகமென்ப கிளியே நன்மை [2]சுவர்க்கமின் பம்மை மைப்பேர் ;
முகமென்ப திடமே துண்டம்; மோகமே மயக்கங் காதல் ;
நுகமென்ப மகநாள் சோதி நாள்நுகத் தாணி முப்பேர். (௨)

12 அகலுளே பெருமை நாடே ரகலமென் றோதல் நாற்பேர் ;
இகல்வலி பகைபோர் மேவல்; இகுளையே தோழி நட்பாம் ;
புகலுடல் குதிர்சொல் வெற்றி; பொக்கமே மிகுதி பொய்யாம்;
நகலொளி சிரித்த லின்பேர்; நகமேவெற் புகிர்ம ரப்பேர். (௩)

13 அகமான்மா மனையுள் ளுள்ள மகலம்வெற் புடன்பா வப்பேர் ;
சகமேமா நிலமே பாதி தகருடன் சட்டை நாற்பேர்;
பகமேபெண் ணின்சின் னப்பேர் வாலமு [3]மதுவே பன்னும் ;
மகமேயோர் நாள்யா கப்பேர்; வைகூர்மை வைக்கோல் பைம்புல். (௪)

14 பகடென்ப கடாச்சேத் தந்தி பஃறியே பெருமை யைம்பேர் ;
அகடென்ப வுதரம் நாப்பண் ஆன்றதீங் குறையே முப்பேர் ;
சகடென்ப பொய்ம்மை யோகஞ் சாகாடே [4]போர்ப்ப றைப்பேர் ;
முகடென்ப கொடிவீ டங்கம்; மோக்கமே தீர்தல் முத்தி. (௫)

15 அகழென்ப வகழி தொட்டல்; அகிலமே சகம னைத்தாம் ;
பகழியா சுகங்கு ழிப்பேர்; பகண்டைசில் லைப்புள் சிவேதை ;
புகழென்ப வகத்தி வாகை போற்றுறுஞ் சீர்த்தி முப்பேர் ;
சிகழிகை மயிர்மு டிப்பேர் வாசிகை திகழ்தே மாலை. (௬)

---

பிரதிபேதம்:—[1]துர்க்கி. [2]சுவர்க்கமின் பஞ்சம் மாடே. [3]மதன்பேர். [4]போர்ப கைப்பேர்.

16 ஆக்கையே யுடலத் தின்பே ரயிற்கணை வீக்கும் பாசம்;
சேக்கையே முலைத மும்பு திகழ்பாயல் கடக ராசி;
சாக்கையே நிமித்தி கன்பேர் பேயுண்டி யதற்குஞ் சாற்றும்;
தீக்கையோன் சிவனே யாசான்; சிகண்டிகே கயம யிப்பேர். (எ)

17 ஆக்கமே பொன்செல் வம்பே றதிகம்பூ மின்மெய் கேடாம்;
தூக்கமே நிவப்புத் தொங்கல் துயிலெனு முப்பேர் செப்பும்;
பூக்கமே வலியி னுமம் புரியுடன் [1]கமுகும் போற்றும்;
நோக்கமே யழகு பார்வை நொய்திலா வுயர்ச்சிக் கும்பேர். (அ)

18 அகரமோ ரெழுத்தே சேரி; அகப்பாவே ணகையுண் மேடை;
மகரமே [2]யிராசி காதல் மலர்த்தூளே சுறவே நாற்பேர்;
தகரமே மயிர்ச்சாந் தீயந் தகரந்தண் மணம்புன் கின்பேர்;
ஒகரமோங் கார மஞ்ஞை; ஊகித்தல் நினைத்த லோர்ப்பாம். (கூ)

19 தகையேயேர் கவசம் பண்பே தளர்வன்பே பெருமை நீளம்;
[3]முகையேபூ மொக்கு ளின்பேர் மொழிந்தநீர் மிடாவும் போற்றும்;
தொகையேயா சிரியங் கூட்டம்; சோகமால் கவான்றி ரட்சி;
நகையேபல் லொளிம லர்ச்சி நகையுட னிகழ்ச்சி யைம்பேர். (கo)

20 அகளமே மிடாவா மூப்பேர்; ஆகவம் [4]புவிபோர் வாசி;
துகளாதல் தூளே குற்றம்; தொக்கேகூட் டந்து வக்காம்;
[5]சகளியே கருமு கைப்பேர் தாதல மிருபேர் காட்டும்;
உகளமே [6]யிரண்டிட் டப்பேர்; ஊக்கலே நினைத்த லூர்தல். (கக)

21 மகடுபெண் குழலி சைப்பேர்; மகன்மைந்தன் புருடன் மாக்கள்;
தகடிலை யைம்மைக் கும்பேர்; தக்கையோர் பறையே தெப்பம்;
முகடியென் [7]பதுதான் றவ்வை முழுமகன் றனக்கும் பேசும்;
மகுடமே முடியு றப்பு மவுலியென் றிரண்டு மாமே. (கஉ)

22 தகைமையே குணமே யாட்சி சான்றாண்மை யெனவே மூப்பேர்;
புகையென்ப தூமங் காதம்; பூக்குதல் நினைத்தல் தோன்றல்;

---

(பி-ம்.) [1]கழுகும். [2]யலர்ப்ப ராகம் மகிழ்காதல் சுறவே மூப்பேர். [3]சிகையேகீழ் மக்கள் பாறு சென்னியிற் கருவிக் கும்பேர். [4]புவிபொ ராவார்.? [5]சகளிகூக் கருமு கைப்பேர்; சகோரமோர் புள்போத் தாங்கை. [6]யிரண்டி டப்பேர். [7]பதமூ தேவி.

திகைதிசை சுணங்கி ஞமம்; சேகென்ப வயிர மாசாம்;
பகையிக லடித்தல் சாதல்; பகர்தலே விற்றல் பேசல். (௧௩)

23 அக்கெனு நாமஞ் சங்கோ டம்பகம் விடைமு சிப்பாம்;
நக்கனே விடையோன் பிண்டி நாதனிர் வாணிக் கும்பேர்;
பக்கணம் வேடர் வீதி பட்டணம் சிற்றூர் முப்பேர்;
தக்கனெண் பரம்பி லொன்று [1]மால்மகன் றனையன் சாற்றும். (௧௪)

24 எக்கலே யூர்தி யேறல் சொரிதலென் றிரண்டு மேற்கும்;
சிக்கலே யிளைத்த லின்பேர் கிடைத்தலுந் தடையும் செப்பும்;
ஒக்கலே குடிசுற் றப்பேர் ஒப்புற லதுவும் போற்றும்;
முக்கோலந் தணர்தங் கைக்கோல் சிராவண நாண்மொ ழிப்பேர். ()

25 ஆகமே காய மார்பம்; அகர்பெரு மரம கிற்பேர்;
யோகமே தியானங் கூட்ட முச்சாயம் போர்க்கு பாயம்;
சாகமே தாழை தேனீ தேக்குச்சா கினிவெள் ளாடாம்;
காகமே யரிட்டங் கீரி [2]கற்பக மவிட்ட நாட்பேர். (௧௫)

26 மேகரா கப்பே ரோர்பண் மிளிர்சிறு கீரைக் கும்பேர்;
மாகத [3]ரோடர் பாட வல்லோர்மற் றொருதே யத்தோர்;
கேகப மசுண மஞ்ஞை கிளர்ந்தபாட் டோர்தே யம்வில்;
பாகனே வலவன் புந்தி; பக்கியே குதிரை பல்புள். (௧௭)

27 வேகமே யகறல் கோபம் விரைவுட லுடம்பே கீழாம்;
பூகமே திரட்சி கூந்தற் பூகம்பூங் கமுகும் போற்றும்;
கோகமே யற்ப நேமிக் குருகென்றுங் கூறற் பாலாம்;
மாகமே படையெ ழுச்சி வானன்றலை திருவாழ் வைம்பேர். (௧௮)

28 நோக்கலே காத்த லின்பேர் காணலு நவலற் பாற்றே;
பாக்கிடைச் சொற்று வர்க்கா யெதிர்காலப் பண்பே முப்பேர்;
போக்குறை நடத்தல் குற்றம் பொய்பத டிப்பே ரென்ப;
மீக்கோளே றுதலி ஞமே மேற்போர்வை பெரிவிவு மாமே. (௧௯)

(பி-ம்.) [1]ஞ் சரோருகன் மகவு மாமே. [2]கற்பகம் விடநாற் பேரே. [3]ராடர் பாட.

29 ஆகாங் கடலே யாக மார்ந்திடு முணவே மூப்பேர் ;
சீகரங் கரகம் வீசு திவலைவெண் கவரிக் கும்பேர் ;
சாகரந் துயிற ணத்தல் தண்கட லெனவுஞ் சாற்றும்;
சேகரஞ் சிகரந் தேமாச் செம்பொன்மா மவுலிக் கும்பேர். (உ0)

30 சாகினி சேம்பு சாகம் ; சகியென்ப பொறைசே டிப்பேர் ;
போகில்கொப் பூழ்பூ மொட்டுப் புட்பொது வெனவும் போற்றும் ;
கோகில முட்டு ளைப்பேர் குயில்பல்லி குரக்குஞ் செப்பும் ;
போகியிந் திரனே பாந்தள் ; புகுதியே வருவாய் வட்டை. (உக)

31 அகறலே குதித்த லோர்ப்புக் கழிவுட னகல நாற்பேர் ;
சிகரிகோ புரமே நாரை சீறெலி வரைகி ரீடம் ;
இகரமோ ரெழுத்தே சந்தம் ; ஏகலே போதல் நாவாய்;
ககனம்விண் படைகான் பல்புள்; ககமேவெங் கணைபுள் ளாமே. ()

32 இக்கென்ப கரும்பி னோடு மிரதமார் கள்ளுக் கும்பேர் ;
குக்குடங் கோழி யின்பேர் சிறகுடைப் பாந்தள் கூறும் ;
சிக்கமே குடுமி யுச்சஞ் சிறையுறி போர்புள் சீப்பாம் ;
சுக்கையே யுடுதே மாலை; சுகியேபுள் சுகழு மாமே. (உங)

33 நக்கலே யொளியே சொன்றி நகைத்திட னுடனுண் டற்பேர்;
மொக்குளே புற்பு தப்பேர் குமிழ்ப்புப்பூ முகையென் றுகும் ;
கைக்கிளை யாழ்ந ரம்பேசர் பாவொரு தலைக்கா மப்பேர் ;
வக்கிரங் கொடுமை மீளன் மடங்கல்போய் நிமிர்தல் வட்டம். ()

34 மகிணனே கொழுந னோடு மருதத்தின் றலைவன் வைக்கும் ;
சகுனமே கிழங்கு நாரை சாற்றிய நிமித்தம் புட்பேர் ;
எகினமே புளிமா நாயே கவரிமா வனப்பு ணீர்நாய் ;
சகுனிபுள் நிமித்தம் பார்ப்போன் ; சகுந்தமீன் பொதுப்புள் பூகம்.

35 அகியரா விரும்பி னோடும்; ஆகாரம் வடிவ நெய்யூண் ;
நிகிரியே வட்ட மாழி தேருருள் தேர்யாழ் வெற்பாம் ;
துகிரிகை பூகஞ் சாந்தே சொற்றசித் திரமே யென்றும் ;
நெகிழியே சிலம்புந் தீயும் [1]நெருப்புறு கொள்ளிக் கும்பேர். (உசு)

(பி-ம்.) [1] நெருப்பிலங் குறுங்கொள் ளிப்பேர்.

36 துகிலிகை யெழுது கோலே சொற்றுகிற் கொடியுங் கூறும் ;
வகிர்வகிர்க் திடலே வாராம்; வகுப்பென்ப தழகே வர்க்கம் ;
சிகிபரி புரமே மஞ்ஞை [1]தீதுறு கேதுத் தீயாம் ;
[2]சுகிருதம் நேய நன்மை; சுகரேயோர் முனிசொர்க் கத்தோர். (௨௭)

37 மேகலை யுடுத்த வாடை விளங்சரைப் பட்டி கைப்பேர்;
பாகலே கார வல்லி பலாவென்றும் பகரற் பாற்றே ;
போகலே பொலிவு நீள [3]லளவின்மை யதற்கும் போற்றும் ;
சர்களந் தடரி ஞமஞ் சமர்செய்பூ மிக்கு மாமே. (௨௮)

38 வாருவே [4]யழகு தோட்பேர் ; மகேழயோர் மாங்க ளிப்பு ;
ஆருவே யெலிகொப் பூழு மாம்பெருச் சாளிக் கும்பேர் ;
காகுளி விற்பூட் டோசை களத்தொலி தவிசே முப்பேர் ;
ஆகுல மொலிக டுக்கம் [5]அருச்சனை துன்பம் நாற்பேர். (௨௯)

39 வீக்கென்ப விசித்த லின்பேர் மிகுதியோர் கணித முப்பேர் ;
தேக்கென்ப கழுகோர் தாரு திகழுளத் தெகிட்டற் கும்பேர் ;
தாக்கென்ப சமரே வீரம் ; சாகையே சினைவே தப்பேர் ;
[6]மேக்கென்ப மேற்றிக் கின்பேர் மேலும்பர் தனக்கு மாமே. (௩0)

40 மாகதி யதிக வேகம் அதிமது ரப்பேர் வைக்கும் ;
[7]சாகசம் மெய்ம்மை நாமஞ் சத்துவ [8]மதகுஞ் சாற்றும் ;
போகரோர் முனிவன் வீரர் புணர்ப்புயர் விடரும் போற்றும் ;
ஆகையே யாக லின்பே ரவாமமும்? பலத்துக் கும்பேர். (௩௧)

41 சகுலமீ னைவியாம்; காகோ தரம் பாம்போர் புண்மோ டின்பேர் ;
குகுமதி மறையி ராவே குலவுமோர் நாடிக் கும்பேர் ;
புருடியே யணிக லன்பேர் பொற்புயர் புருரும் போற்றும் ;
வெகுளியே யடங்கா மைப்பேர் வெஞ்சின மதுவு மாமே. (௩௨)

42 தொகுதியே நெருக்கங் கூட்டஞ் சொற்றிடு திரட்சி முப்பேர் ;
பகுதியே கொடிப்ப டைப்பேர் பருத்திடல் [9]இரண்டும் பண்ணும் ;

(பி-ம்.) [1]தீதற. [2]சுகிருத மறநெய். [3]மனவின்மை. [4]யெழிறோள் காமம். [5]; அகலிகை புலியோர் பெண்ணும். [6]மேக்கென்ப மேற்கே மேலாம்; மிகையேவே தனை தூ யிப்பேர். [7]சாகசம் வழக்கம் வீரஞ் சத்துவங் களிறே நாற் பேர். [8]மதற்குஞ் (?) [9]பருதி கூட்டம்.

தகுதியே பொறையொ டூக்கந் தக்கநல் லறிவும் போற்றும் ;
நகுலியே கீரி யோர்கோ; நகாயுதங் குரங்கே சிங்கம். (௩௩)

43 புகரென்ப வொளிகேழ் குற்றம் புற்கென்ற லெழின்ம ழைக்கோள்
பகர்சொன் றி யருவி யோடு பற்றுயிர் கொக்கொன் பான்பேர் ;
தகரென்ப வகில மாடு தகர்த்தலென் றோதல் முப்பேர் ;
[1]மகரந்த மலர்ப்ப ராகம் வருநறா வுடன்வண் டாமே. (௩௪)

44 உக்கமே மருங்கின் பக்க மொண்மருங் கால வட்டம்
குக்குடஞ் சுரபி செந்தீ [2]கொழுவிடை முகமேழ் பேராம் ;
பக்கமே யருகு நட்புப் பறைதிதி [3]படைக்க லப்பேர் ;
ஒக்கமே யகல மற்ப [4]மொழிவுருப் பொலிவு மாமே. (௩௫)

45 சக்கரம் பெருமை யோர்புள் தரணிதே ருருளே யாழி
மிக்கரு வரைசூழ் வட்ட மிளிர்கதை பிறப்பொன் பான்பேர் ;
கொக்கரை வளையே சங்கே குதைவில்வெம் பணியே நாற்பேர் ;
அக்கர மெழுத்தி னும மயருநோ யொன்று மாமே. (௩௬)

46 ஊக்கமே வலிதா ளாண்மை யுளமிகுத் திடலே யுண்மை
நீக்கமில் விரிவு யர்ச்சி யா றுமே நிகழ்ந்த நாமம் ;
பாக்கமே புறம்ப ணைக்காம் [5]பதிபெருங் கிராமம் பண்ணும் ;
சூக்கமே சுரும்பே யற்பம்; சோகுபே யுடன்பேய்ச் சோரும். (௩௭)

47 பகலேயோர் முகுர்த்த நாளே பலபாடே நடுவே தேசு
பகலவன் செயலே பாகு நுகத்தாணி யொன்பான் பேராம் ;
இகலனே நகுல மோரி; ஏகமொன் றுயர்ந்த முத்தி ;
அகலமார் புடனே பூமி விரித்துரை யகலம் நாற்பேர். (௩௮)

48 தோகையே [6]வால்முன் றானை சுற்றுால் தூவி மஞ்ஞை
வாகைசே ரெழிற்ப தாகை மயிற்பீலி யுடனேழ் பேராம் ;
ஈகையே கொடைகாற் றுப்பொன் இண்டைகற் பகமில் லாமை ;
ஓகையே வருவ சொல்லு முவகைக்கும் புகலற் பாற்றே. (௩௯)

---

(பி-ம்) [1]மகரந்தந் தணர்தேன் வண்டாம்; வாசத நூல்கள் ளாமே. [2]கோவிடை, [3]படைக்கலப்பேர், [4]மொழிவுறும், [5]பதிநெய்தற் பதிபே ரூராம். [6]வால்முந் தானை.

49 சிகரமே குவட்டி னுச்சி திவலைவெற் புடனே சென்னி
யெகினமாக் காக்கை தெண்ணீ ரெறிதிரை யெனவேழ் பேராம் ;
பகவன்மா லீசன் புத்தன் பங்கயன் சினனோ டைம்பேர் ;
நிகர்தலே நிறைத லொப்பாம் ; நெகிழ்தலே குழைவே விள்ளல். ()

50 சக்கிரி யேரு லாலன் றாரபதி தறுகட் பாந்தள்
[1]இக்குவேள் தாதை செக்கான் கருப்பாலை கதலி யேழ்பேர் ;
கொக்கயஞ் செங்காய் மூலங் குரண்டமாக் குருக்கத் திப்பேர் ;
சொக்கொளிர் பசும்பொன் சோர்வு சொல்லரு மெழின்மூப் பேரே.

51 பொருட்டென்ப முளரிப் பைம்பொற் பூங்கொட்டைத் துளையுஞ் சேற்றின்
மிகுத்திடு கொப்புள் நீண்ட மால்வரை விளங்கு முப்பேர் ;
பகுத்திடல் பாதி செய்தல் தறித்திட லெனவும் பாற்றே ;
[2]முகிழ்த்தல்வா ளாகி டத்த லொடுங்கற்கு மொழிபே ராமே. (௪௨)

52 பாகமே பாதி யின்பேர் பலகூறோர் கணிதம் பிச்சை
வேகமார் பதம்பட் டாடை விளங்குநா மங்க ளாறும் ;
சூகரங் கரம்பன் றிப்பேர்; துகிரேசெம் பவளஞ் சேப்பாம் ;
[3]நாகர மோர்தே யச்சொற் சீவனென் றெனவே நாட்டும். (௪௩)

53 கைகரம் படையு றுப்புக் கருத்துட னொழுக்கந் தங்கை
[4]மொய்விட மொப்ப னைப்பேர் [5]முகிர்கீழ்மை சார்பொன் பான்பேர்;
மைகறை மேக மாடு மலடேயஞ் சனங்குற் றப்பேர் ;
வைகல்வை [6]கறைநாட் டங்க லூரியன கழிவும் வைக்கும். (௪௪)

54 கோகன கஞ்ச ரோரங் குளிர்கையாந் தகரை வெய்ய
மோகஞ்செய் நிலக்க டப்பென் றுரைபசி தான மூன்றும் ;
பாகவன் றழல்தீத் தேவாம்; பாகர்கண் மதில்சூ தார்க்காம் ;
சூகையென் பதுவே யானை சொற்றசிற் றிற்கும் பேரே. (௪௫)

55 இகுத்தலே யழைத்த லீதல் எறிதலே செகுத்தல் வீழ்த்தல்
[7]வகைப்படத் துடைத்தல் தாழ்த்தல் [8]வருத்திட லெண்பே ராகும்;

(பி-ம்.) [1]மிக்கவை நிறைத னியாய மலர்தலூ ணாடிசின் மேவும். [2]இகழ்த் தல்காழ்த் தல்செ ருக்க மெறிதலே கடத்த லும்பேர். [3]நாகரந் திசைச்சொல் லொன்றே ; கருதலே சிரித்தல் பேசல். [4]மெய்விட. [5]மிளிர் கீழ்மை. [6]கறைநா டங்க. [7]மிகைப்படத். [8]வருந்திடல் விளம்பெண் பேராம்.

அகைத்தலே கோபொ டித்த லறுத்திட லுயர்த்த லோடே
[1]மிகைப்படு மெழுச்சி மோதல் [2]விளம்புபே ரிருமூன் றாமே. (௫௬)

56 நாகமே குரங்கு புன்னை ஞாழல்வெற் பியானை தூசு
மாகங்கா லகிகா ரீயம் வளர்செரர்க்கம் பன்னொன் றேபேர் ;
ஊகமே கருங்கு ரங்கோ டெட்டிற்குறை விலங்கின் கூட்டம்
போகிலாத் தர்க்கஞ் சங்கை பொருபடை வேங்கை யேழ்பேர். (௫௭)

57 பாகென்ப பருப்புப் பாக்குப் பாணிபால் பகிர்ச்சி பாகன் •
பாகஞ்சர்க் கரையா றுணம் பரைகரை யீரா றேபேர் ;
நாகென்ப சங்கு காரான் நத்தைபா வீர்வாழ் சாதி
மோகங்கொள் பெண்பா லீறு விளமைமூண் மரமெண் பேரே. (௫௮)

58 தூக்கென்ப வொலிபாண் கூத்துத் துலாங்தொங்க லயலா ராய்தல்
தூக்கணங் குருகே பாரஞ் சொற்றிடு மூவமை விற்றல்
நீக்கமில் [3]நிவப்பி னோடே நிறுத்திடல் குரவன் றன்னோ
டாக்கிய சிக்க மென்னு மபிதான மூவைந் தாமே. (௫௯)

59 வாகையே திறமு யற்சி வனப்புயர் வெற்றி சால்போ
டீகைநல் லொழுக்கங் கல்வி யியலறத் துறையே யுண்மை
யோகைசேர் மிகுதி பண்போ டொருமா மருந்த வங்கள்
[4]மோகமார் முடமே யென்று மொழிநாம மீரெட் டாமே. (௬0)

60 [5]வழுத்துறு மெய்ம்மூ வாறின் வருகின்ற ககர மாதி
யெழுத்தெது கையினிற் செய்யு[6]ளேம்பானென் றிசையச்செய்தான்
பழுத்தசெஞ் சுடர்வே லாற்சூர் பகவெறிந் தோன்பொற் பாதம்
அழுத்துறு [7]மிதையன் செந்தி லருமருந் தையன் றனே. (௬௧)

ககரவெதுகை முற்றும்.

(பி-ம்) [1]வகைப்படு. [2]வழுத்துபே. [3]நிவப்பே பண்டம். [4]மோகமார் பேர்மூ வைந்தாம்; முகையேசேர் மிடாப்பூ மொக்குள். [5]வழுத்துயிர். [6]ளேழே ழென். [ இப்பாடத்திற்கேற்ப 'சகுலி' என்று தொடங்கும் 41-ம் செய்யுள் ஒருபிரதியிற் காணப்படவில்லை.] [7]மிதையச்.

# நகரவெதுகை.

61 அலங்குபன் மணிகொ ழிக்கு மணிகிளர் சாவ ணத்தின்
இலங்குமு விருமு கத்தோன் எம்பிரான் றேவர் சேனை
கலங்குறா வண்ணங் காத்த காரணன் பாதம் போற்றித்
துலங்கியே வருந கார வெதுகையின் றெடையைச் சொல்வாம். (க)

62 தங்கியே [1]யாண்மாச் செந்தீ யால்நா ளரைச்சட் டைப்பேர் ;
பைங்கதிர் பனிவெண் டிங்கள் பகர்நெல்லா திப்கு ரற்பேர் ;
சிங்கியோர் மருந்தி னுமங் தீங்கடு வுடனே ராடல் ;
பங்கியே யாண்ம யிர்ப்பேர் பற்பிற மயிரு மாமே. (உ)

63 தேங்கலே [2]மெலிவி னுமம் திகழச்சக் குறிப்பெ னும்பேர் ;
வாங்கலே கொளல ழைத்தல் வளைதலோ டிசைத்தல் நாற்பேர் ;
தாங்கலே படுகர் தாங்கல் சாற்றுளக் குறையே முப்பேர் ;
[3]ஏங்கலே மிகுந்த வோசை யிசைக்குமேக் கப்பே ராமே. (ங)

64 மங்கலி சுமங்க லிப்பேர் மஞ்சிக னெனவு மாமே ;
[4]சங்கரி துமித்தல் நாமம் தாணுவின் றேவி மாயோன் ;
அங்கதம் வசைச்சொல் வெந்தீ யரவுதோ ளணிமார் பம்பொய் ;
புங்கவம் நந்தியம்பு; பூங்கற்றே செவ்வி பூதம். (ச)

65 சங்கனே மழைக்கோ ளரயத் துறைபவன் பேருஞ் சொல்லும் ;
மங்களன் செவ்வா யின்பேர் மணம்பொருந் திடுவோன் வைக்கும் ;
அங்கமே யென்பு தேக மாறங்கங் கதுப்பே யூகம் ;
சிங்கமே யாளி சீயம்; செங்கைபா திரைநாள் கைப்பேர். (ரு)

66 அங்கையே யத்த நாட்பே ரான்றகைத் தலமுஞ் செப்பும் ;
கங்கமே [5]யெருவை பாறு கழுறுஞ்சீப் புடனே முப்பேர் ;
கொங்கொரு தேபங் தாது குளிர்மணந் தேறல் நாற்பேர் ;
கிங்கரந் தணவா வண்புங் [6]கிளத்துதூ றாக்கும் பேரே. (சு)

(பி-ம்) [1]யங்கஞ். [2]மெலிவெ திர்ப்பு. [3]ஏங்கலே மயிற்கு ரற்பே ரிரங்கலு மொலியு மாமே. [4]சங்கரி கிளவி வேட்டல். [5]பவனை சேனம். [6]கிளத்துறு தூ தோர்சா திப்பேர்.

67 பொங்கலே பொலிவு யர்ச்சி பொருந்து று நிறைவே முப்பேர் ;
மங்கலம் பொலிவி ஞெம மடப்பமோ டெழில்கு ணப்பேர் ;
[1]பிங்கலம் பொன்மை பூசை கபிலமா னிறமும் போற்றும் ;
இங்குலி கப்பேர் சாதி லிங்கமும் சிவப்பு மேற்கும். (எ)

68 பொங்கரே யிலவு சோலை [2]புறம்பேபூஞ் சினையே வெற்பாம் ;
அங்கித முடற்ற மும்பே [3]யங்கிகா ரமுமே யென்ப ;
மங்குல்விண் ணிருள்மே கப்பேர்; மங்கையோர் பருவம்பெண்ணும்;
பிங்கலே யோர்வாய் வின்பேர் பிறழாங்கை தனக்கு மாமே. (அ)

69 புங்கமே யுயர்ச்சி யம்பே பொருமம்பிற் குதையே தூசாம் ;
திங்களம் புலிமா தப்பேர் ; தெங்கேதா ழைநித் திப்பாம் ;
வங்கரே கொல்லஞர் கற்றேூர் வழுத்துமோர் தேயத் தோர்க்காம் ;
அங்கண முற்றஞ் சேறே யாஞ்சல தாரைக் கும்பேர். (கூ)

70 கங்கபத் திரமே வாளி கழுகின்றன் சிறகுங் காட்டும் ;
சுங்கமே [4]திறைய ளத்தல் சொற்றவா யத்து றைப்பேர் ;
வங்கணங் கத்தி ரிப்பேர் கேண்மைக்கும் வழுத்தற் பாலாம் ;
கங்கணங் கமண்ட லப்பேர் காத்தொடி [5]யதுவு மாமே. (க0)

71 சங்கென்ப வளைகோ டேபுள்; சங்கைபே யுடனே யையம் ;
பங்கென்ப முடமே யாகும் பாதியுஞ் சனியு மேற்கும் ;
கங்கென்ப வரம்பின் பக்கம் கருந்தினை கழுகு பாறு ;
இங்கென்ப [6]திவிடம் காயம் ; [7]இலிங்கமே குறிகு லிங்கம். (கக)

72 செங்கோடே யோர்ம லைப்பேர் செருந்திக்கும் பொருந்தி நிற்கும் ;
அங்கார கன்பேர் செவ்வா யடர்த்தசெந் தழற்கும் போற்றும் ;
செங்காவி யலர்சே தாம்பல் சீரைதோய்த் திடுஞ்செங் கற்பேர் ;
பைங்கூழே பயிர்கோ யின்பேர்; பாங்கரென் பதிடம் பக்கம். (கஉ)

---

(பி-ம்.) [1]பிங்கமே குரற்கோப் பூசை; பிங்கலங் கபிலம் பொன்மை. [2]புறம் பெழுஞ். [3]பங்கிகார் முகமே. [4]திறைய ளித்தல். [5]மருந்து மன்னும். [6]திடமே. [7]இலிங்கமாண்.

73 [1]பாங்கென்ப தலங்க ரித்தல் பகரெழில் முயற்சி யாட்சி;
ஞாங்கர்வேல் பக்க முன்பே மேலிடம் நவிறற் பாலாம்;
சோங்குநா வாய்ம றப்புச் சொற்குரு கெனவே முப்பேர்;
வேங்கைபொன் மாம்பு லிப்பேர்; வெங்கோலே கொடுங்கோல் பல்லம்.

74 ஓங்கலே [2]வரைமே டியானை யுயர்வீபா யம்வேய் நாவாய்;
இலாங்கலி தெங்கு காந்த ளுழுபடை யெனவே முப்பேர்;
தூங்கல்கூத் தியானை தூக்கஞ் சோம்புசாத் தாழ்வோ ரோசை;
கீங்கபஞ் செவ்வே ளாண்மை [3]கனத்தவன் பணிபொன் னூற்பேர்.

75 பங்கமே தூசு பின்னம் பதிந்த சேறுடனே குற்றந்
தங்குதொல் வினையே யென்னச் சாற்றுமைம் பேருஞ் சொல்லும்;
வங்கமோர் தேயம் வெள்ளி வழுதலை யுடன்க ருத்துப்
பொங்குறு நாவா யீயம் போற்றும்பே ரிருமூன் றாமே. (௧௫)

76 சங்கமே கணைக்கா லோரெண் சவைசங்கு புலவர் நெற்றி
பொங்குகை வளையி னோடு பொருந்துறக் கூட லெண்பேர்;
தொங்கலே பீலிக் குஞ்சம் தூக்குடன் றுயில்பூ மாலை
சிங்கலில் கவிகை தெய்வ வுத்தியென் றறுபேர் செப்பும். (௧௬)

77 [4]றாங்கரே நறுங்கல் தேவர்; நுங்கலே விழுங்கல் நோயாம்;
வீங்கலே மிகுதி வீக்கம்; வெங்கதி ரழல்வெய் யோனும்;
தீங்களே நறவஞ் சோரம்; சிங்கலே யெஞ்சல் கேடாம்;
ஈங்கோர்முண் டகவல் லிப்பே ரிவ்வுழை யெனலு மாமே. (௧௭)

78 [5]துதிபெறு மிரண்டா மெய்யாய்ச் சொற்பெற வருங கார
வெதுகையி னுற்ற செய்யு ளிசையவீ ரெட்டாய்ச் செய்தான்
கதிர்விரி தடக்கை வேலான் கந்தவேள் மணிப்பொற் றண்டை
அதிர்கழல் வணங்குஞ் செந்தி லநுமருந் தையன் றானே. (௧௮)

ஙகரவெதுகை முற்றும்.

---

(பி-ம்.) [1]பாங்கெழின் முயற்சி யாட்சி பரிசலங் கரித்தல் பக்கம். [2]வரைமோ. [3]கனத்திடு. [4]நாங்கலே. [5]துதிபெற வுணர்வோர் சொற்ற நாயவெல் லினங காரம்.

# சகரவெதுகை.

79 கொலைகிளர்ந் தொளிருஞ் செய்ய கூரிலை வடிவேற் றாங்கு
மலைசெறி கடகத் திண்டோள் மஞ்ஞைவா [1]கனத்தெம் பெம்மான்
முலைமுகிழ்க் குறமின் கேள்வன் மூவிரு முகனைப் போற்றிக்
கலைவலோர் புகழ்ச கார வெதுகையின் கவியைச் சொல்வாம். (க)

80 கோசரம் [2]சிவலிப் புட்பேர் கூர்மைக்கும் புரிக்கும் வைக்கும்;
ஊசலே உஞ்ச லூசல்; ஒசிவே நுண் மைசா யற்பேர்;
கூசலே [3]வெஃக லச்சம்; குசமென்ப விருக்கந் தெர்ப்பை;
கேசர மகிழ்ம ரப்பேர் கிளத்துபூந் துணர்தே னீயாம். (உ)

81 அசதியீ ரெட்டாண் டிற்பெண் ணயர்வுட னோர்கோ வைப்பேர்;
கசிவேயா குலமி ரங்கல் காதல்வேர் வுடனன் பாகும்;
[4]பிசிவேயொட் டல்ந டத்தல்; பிசிதம்பொய் யிறைச்சி வேம்பு;
[5]கொசிவேநோய் வருத்தத் தின்பேர் நுண்மைக்கும் புகல லாமே. (ங)

82 ஆசையே திசைபொன் னேமால்; ஆசுக மம்பு காற்றாம்;
காசையே நாணல் காயா; [6]கசையென்ப கவசம் நாணும்;
பூசையே பூனை பூசை; பொச்சையென் பதுகான் வெற்பாம்;
ஓசையே கதலி சீர்த்தி யொலியெனு முப்பே ராமே. (ச)

83 முசலியே கோம்பி தாழை மொய்வலி யுடும்பே முப்பேர்;
[7]அசமறி மூவாண் டின்நெல்; அசனியே யுருமு வச்சிரம்;
கசநறுந் தாதி ரும்பு களிற்றுட னளவொன் றாகும்;
கசடைய மலினங் குற்றஞ் சகடெனும் நாற்பேர் காட்டும். (ரு)

84 பாசமே பேய்நூ லூசிப் படுதுளை [8]கயிறென் றாமே;
வேசரி கருத்த பங்கோ வேறெனுங் கரம் விளம்பும்;
காசறை மயிர்ச்சாந் தின்பேர் கஸ்தூரி மணிப்பொ துப்பேர்;
ஈசன்மா லரனே வேத னெவற்றுக்கு மிறையென் றாமே. (சு)

---

(பி-ம்.) [1]கனத்தே றெம்மான். [2]புரியி னுமஞ் சிவலிப்புட் குருகுங் கூறும். [3]வெள்கல்(?) [4]பிசிதமே பொய்யி றைச்சி நடத்தல்வேம் புடனீ ரும்பேர். [5]நொசிதலே வருத்தம் நோயே. [6]காற்பண மெனுங்க ணிப்பாம். [7]அசனிவச் சிரமி டிப்பேர்; ஆசுல மிடும்பை பூசை. [8]கயிறே யன்றாம்.

85 உசிதமே நீர்வ ளைத்த லதிசய மழைத்த லோதும் ;
இசியொன்றை யிணுங்கு தற்பே ரிசித்திடல் சிரித்தல் முப்பேர் ;
பசியுத ரக்க னற்கும் பாசுதற் கும்பேர் வைக்கும் ;
மசிமதித் திடல்கார் மையாம்; வசந்தனோர் கவிவேள் தென்றல். (எ)

86 மூசல்மொய்த் திடல்சா வென்ப; மூசுவேயோர் வளல்மூ சுப்பேர் ;
கீசகங் குரங்கு தட்டை கிளர்த்திய [1]தலைத்தி ரணம் ;
வீசலே யெறித லீதல் மிகுத்திடல் பாத்தல் நாற்பேர் ;
பாசறை [2]பன்ன சாலை பாடிவீ டிரண்டு மாமே. (அ)

87 உச்சிநண் பகல்மு டிப்பேர் ; [3]ஒசித்திடன் முறித்தல் சாய்த்தல் ;
வச்சிரஞ் சது ரக் கள்ளி வயிரம்வெங் குலிச முப்பேர் ;
நொச்சிசிற் றார்ம திற்பேர் நுவல்சிந்து வார மென்ப ;
மிச்சில்போம் பொருளே யெச்சில்; வீசமோர் கணிதம் வித்தாம். (கூ)

88 ஆசிடை கூட்டஞ் சீரை வாழ்த்துமென் றறைதல் முப்பேர் ;
தேசிக மெழில்நற் காந்தி செப்பொனோர் நடந்தி சைச்சொல் ;
ஆசினி பலாவி சேட மரவுரி மரம்விண் சேகாம் ;
தாசிசொற் பரணி நாட்பேர் [4]அடிமைக்குஞ் சாற்ற லாமே. (க0)

89 [5]விசுவமே நெடுமால் பூமி ; விசாலமே பொலிவு தாவல் ;
வசுவென்ப செம்பொன் றேவர் வன்னிகோ தனநாற் பேரே ;
பசுவென்ப திடபஞ் சீவன் [6]பற்றுறும் பெற்ற முப்பேர் ;
பிசுனங்கொண் டியமே கோளே பேசுறும் பொய்யென் றுமே. (கக)

90 குச்சென்ப சிற்றில் குற்றி குலவும்பா வாற்றி முப்பேர் ;
நச்சென்ப விடம்புண் மூக்கு நவின்றிடு விருப்ப முப்பேர் ;
கச்சென்ப கைப்பே மீனே கனன்முலைக் கச்செ னும்பேர் ;
[7]அச்சென்ப கழற்காய் கூட்டல் கம்பிவாங் கற்கோ ரச்சாம். (கஉ)

91 பாசியே [8]நாரம் ஞாளி பசாசெனு முப்பே ரோதும் ;
வாசிமா வோதல் தெற்காம்; [9]மச்சம்பொன் னுரைமச் சப்பேர்;

---

(பி-ம்.) [1]தலைக்கிராணம். [2]யன்ன. [3]ஒசித்தல்சாய் வுதவி யற்றல். [4]சாற்றடி யாட்கு மேற்றும். [5]விசியென்ப விசித்தல் மஞ்சம். [6]பாற்பொழி. [7]அச்சென்ப வணிகு யிற்றச் சணிகழற் குழுத்தே ரச்சாம். [8]மழைநாய் பாசி பசாசெனும் நாற்பே ராமே. [9]'மச்சமே மாற்றின் றிட்டம் நெடும்புழற் பேரும் வைக்கும்' என்ற பாடத்தோடு இச்சொற்பொருள் பிறிதோரிடத்துள்ளது.

தேசியே யெழில்சு ணங்கன் ; திசைதிக்குத் திகிரி யென்றும் ;
கோசிகஞ் சாம வேதம் கோதில்நற் படாமு மாமே. (கங)

92 பசும்புல்லைப் கூழே சட்பம்; பசுமையே கேசம் பைம்மை ;
விசும்புவிண் கருபம் மேகம் விளங்கிய துறக்க நாற்பேர் ;
தசும்புசெம் பொன்கு டப்பேர்; தாசுசே கண்டை வல்லாம் ;
அசும்புபைம் புற்கூ வற்பேர் ; [1] அசூசமே நாசம் நாயாம். (கச)

93 கொச்சியோர் புதரே தீவாம் ; குச்சங்கோண் டியங்தெர்ப் பைப்பேர் ;
பிச்சியே கருமு கைப்பேர் பித்துளோன் றனக்கும் வைக்கும் ;
துச்சிலே யொதுக்கி டத்தோ டணிக்கிடு சூட்டுஞ் சொல்லும் ;
சச்சையே யிகழ்ச்சி தேய்வை சட்டைவெற் பகங்கூற் றப்பேர். (கரு)

94 அசிபடைக் கலம்வா ளின்பே [2]ரவமதி சிரிப்புஞ் சாற்றும் ;
நிசியிரா மஞ்சள் பொன்னும்; நேசங்கோ ரங் தளம்நே யப்பேர் ;
பிசியேபொய் வெண்சோ றோடு பேசுநூற் பொருளே முப்பேர் ;
[3]சுசிகோடை சுத்தம் வெண்மை சுடர்த்தழ லெனுநாற் பேரே. (கசு)

95 குசைபரி சுவஷிற் றோன் றுங் கூந்தல்கூர் கவினங் தெர்ப்பை ;
வசைபழி மொழிப்பேர் குற்றம்; மாசியோர் புதரே மாதம் ;
[4] அசைநிலை மேம்பா டோதல் எழுத்திரண் டுறழ்த லாகும் ;
விசைவிரை வுடனே வெற்றி; மிசைசேட ழுயர்வே சோறும். (கஎ)

96 அச்சுதன் மால்கே டில்லான்; [5] அசைத்தல்சொல் லுலாவல் கட்டல் ;
எச்சமே குறைசே யாகம்; ஏசியே கிளியி கழ்ச்சி ;
கச்சையே தழும்பி ழேடு கயிறுமெய்க் கவச முப்பேர் ;
பொச்சாப்பே மறவி யின்பேர் பொல்லாங்கென் றிரண்டு மாமே. ()

97 ஊசியே சூசி கண்டம் ; உசாத்தேர்ச்சி யுலாவ லென்றும் ;
பூசலா யோத மோசை புலர்த்தலொப் பனையே நாற்பேர் ;
தேசிக ஞசான் றேசாங் திரியெனு மிருபேர் செப்பும் ;
[6]நாசிகார் விடமே மூக்காம் ; நசையிச்சை யொழுக்கத் தின்பேர். ()

(பி-ம்.) [1] ஆசூசம் நாசம் நாயாம். [2] ரவமதிச் சிரிப்பே. [3] சுசியென்ப குடையே சுத்தஞ் சுடர்த்தழல் வெண்மைக் கும்பேர். [4] அசையென்ப நிலைமேம் பாடே யசைதலீ ரசைய சைச்சொல். [5] அசைதல் சொல். [6] நாசிக மருந்தே யாகலிம்.

98 மிச்சமே பொய்ம்மை மிஞ்சல்; விசித்திர மழகு மேன்மை;
கொச்சைவெள் ளாட்டி ழுமம் இளைத்தலின் பேருங் கூறும்;
அச்சமே [1] அகத்தி யைம்மை யஞ்சலி யெனவே முப்பேர்;
நிச்சய மென்னும் நாமந் துணிவுமெய்ம் மையுநி கழ்த்தும். (௨௦)

99 ஓச்சலே யெதிர்த்து வீச [2] லுலகோம்ப லோய்தல் முப்பேர்;
பாச்சலே யெழுச்சி பாய்தல்; பசும்பிடி யிலைத மாலம்;
காச்சலே காய்த லின்பேர் கோபமுங் கழறற் பாற்றே;
தோச்சலே பிசைசேர் வெண்பாற் [3] புனலாட றுவளல் முப்பேர். (௨௧)

100 கோசமே மதிலு றுப்பாண் குறிமுட்டை முறைபண் டாரம்
[4] காசில்பொத் தகநீள் வீதி கருகூல மென்றென் பான்பேர்;
பாசனஞ் சுற்றம் பாசம் பாண்டமுண் கலனே நாற்பேர்;
வாசமே யிருப்பி டம்பூ மணம்பல்புட் சிறகே தூசாம். (௨௨)

101 கச்சமே கரிக்க ழுத்திற் கயிறள வொடுமே ரக்கால்
நிச்சயத் துணிவு கூர்வாள் நினைத்தலங் கவடி யேழ்பேர்;
பிச்சமாண் மயிரும் பீலிக் குடையும்வெண் குடையும் பேசும்;
இச்சையே பொய்த்த லாசை யிடித்தலஞ் ஞான நாற்பேர். (௨௩)

102 இசையுரைக் கிளவி பாட்டோ டிசைப்புடன் புகழே வண்மை
திசைபொளிர் பணத்தி னோடே நித்திப்பென் றெண்பேர் வைக்கும்;
விசையமே பருதி வட்டம் வெற்றிசார்க் கரைவை யப்பேர்;
[5] அசைதலே தங்கல் நோதல்; அசனம்பட் டினிபல் [6] லுண்டல். (௨௪)

103 ஆசானே புகர்பொன் சுவாமி யயர்வில்பா லைத்தி றப்பண்
தேசாருஞ் செவ்வே ளென்றே செப்புநா மங்க ளெந்தாம்;
ஆசார மறிவொ ழுக்க மாடைபெய் மழைகாட் சிப்பேர்;
தாசோக மொட்டு கப்பேர் தருமமென் றிரண்டு மாமே. (௨௫)

104 [7] ஆசுகைக் கருவி குற்றம் அற்பமே கவச மோர்பாட்
டேசிலாச் சுடுதி யாசோ டெல்லாமென் றுரைத்த லெண்பேர்;

(பி-ம்.) [1] பயம கத்தி யைம்மையஞ் சலியே நாற்பேர். [2] லோட்டுத. [3] ரேயுற. [4] காசுபொத்(?). [5] அசைதனோய் நெருங்கல் தங்கல். [6] லூணும். [7] ஆசெசன்பு சுடுதி வான்பாட் டிலற்புங் கவச மூற்றும்.

[1]தூசுபோர்ப் படைவ குப்புத் துகில்யானைப் புரசை முப்பேர் ;
காசுநற் செம்பொன் கோழை கதிர்மணிப் பொது க்குற் றப்பேர். ()

105 செச்சையே வெட்சி யாடு செறிசந்தக் குழம்பு நீறு
பொச்சையாங் காடு சோடு புகன்றவிப் பேர்க ளாறும் ;
[2]பச்சையே தோலி லாபம் புரிமளம் புதன்மால் புந்தி
மெச்சுபை யொளிவி ரிக்கு மென்மர கதமு மாமே. (உஎ)

106 சசிநில விந்தி ராணி தவளங்கற் பூரம் [3]பற்றும்
நிசியுறழ் கடலி னோடு நிறத்தகார் மழையென் றேழ்பேர் ;
வசிவசி யம்வாழ் கூர்மை வாசித்தல் திரட்சி குற்றம்
[4]கசியுற வருட்டல் போழ்ந்தே வடுப்பட லெண்பேர் காட்டும். (உஅ)

107 வழுவில வொலிசி றக்கும் வல்லின மாஞ்ச கார
மொழியெது கையினிற் செய்யுள் மூவொன்ப தாகச் செய்தான்
கழுதுண வசுரர் சேனைக் கடறொலை குகனைப் போற்றும்
அழகியற் செந்தின் மேவு மருமருந் தையன் றானே. (உகூ)

[மீகை:] 1. தூசியே படைவ குப்புந் தாகமு மென்னற் பாற்றே. 2. போசரே காவிரிக்கும் புகல்வினைக் குடையர்க் கும்பேர். 3. முச்சுடரிரவி சோமன் மொய்யொளித் தழலு மாமே.

சகரவேதுகை முற்றும்.

---

## ஞகரவெதுகை.

108 நற்றவ முனிவர் விண்ணோர் நான்முக னெடியோ னேத்தும்
பெற்றமூர் கடவுட் கன்று பேசரும் பொருளு ரைத்த
வெற்றிவேற் குருநில் செங்கேழ் மென்மலர்ப் பாதம் போற்றிச்
சொற்றிகழ்ந் திடுஞ கார வெதுகையின் றொடையைச் சொல்வாம்.

109 கஞ்சுகி யங்கி யேமெய் காப்பாளர் பாந்தண் முப்பேர் ;
மிஞ்சிகை குண்டலப்பேர் விளங்குபே ழைக்கும் வைக்கும் ;

---

(பி-ம்.) [1]தூசென்ப துகில்மா வியானைப் புரசைகட் டிற்று சேயாம். [2]பச்சையே புதன்மா ஞாதி தந்தோ லோர்புதர்பைற் காசாம். [3]பவ்வம் [4]இசியுற.

வஞ்சளம் [1]காரிப் புள்ளே வல்லிசா தகக்கொ டிப்பேர் ;
அஞ்சனி யிராமன் றாத னன்னைகா யாவுக் கும்பேர். (உ)

110 மஞ்சமே கட்டில் தூசாம் ; வாஞ்சையே விருப்ப மோர்புல் ;
கஞ்சிகை மணிக்காற் பள்ளி திரையாடை துகிலுங் காட்டும் ;
குஞ்சரக் கிளவி யானை குளிர்நறுங் குவளைக் கும்பேர் ;
[2]ஐஞ்சைநல் லெழிலே யாடாம் ; அஞர் துக்க மறிவி லாமை. (௩)

111 கஞ்சனும் வலியன் கல்வாய்ப் புள்ளேகண் ணடி மூப்பேர் ;
நெஞ்சமே மனமார் பின்பேர்; [3]நீஞ்சலே குடித்தல் நீந்தல் ;
மஞ்சரி யத்த நாள்பூங் கொத்துத்தார் தளிரோர் மன்னூல் ;
அஞ்சலி பேதை வாவ லங்கைகூப் புதலென் றமே. (௪)

112 தஞ்சமா லெளிமை தாழ்வு தருப்பற்றுக் கோடே யைம்பேர்;
துஞ்சலே நிலைபே றருந் துயில்சோம்பு சாவே நாற்பேர் ;
கஞ்சமே தாளங் குல்லை கமலம்வெண் கலம்வட் டப்பம் ;
[4]அஞ்சமே யெகினப் புட்பேர் அச்சமென் றிரண்டு மாமே. (௫)

113 இஞ்சியே மதிளே யல்ல மிலங்குதோற் பலகைக் கும்பேர்;
வஞ்சிமேற் செலவே யோர்பா வல்லிபெண் கருவூ ரைம்பேர்;
பஞ்சிபஞ் சாடை [5]தூறும் ; பஞ்சரம் செருந்தி கூடாம் ;
கஞ்சியே யனங்கு மும்பு காஞ்சிமா நகரு மாமே. (௬)

114 குஞ்சமீச் சோப்பி நாழி குறளைச்சொல் குறள்கூன் குன்றி
விஞ்சுதுயக் கவரிக் குஞ்சி விளம்பிப நாம மேழாம் ;
கஞ்சனை யத்தம் பானை; காஞ்சனம் பொன்புன் கேபேர்;
வஞ்சமி லுஞற்றுத் திபோகம் வழக்கோதல் மனவெ ழுச்சி. (௭)

115 காஞ்சியே கச்சி யெட்டி கருமைமே [6]கலேபு ணர்ச்சி
பாய்ஞ்செதி ரூன்ற லோடே நிலையின்மை பகரேழ் பேரே;
ஆஞ்சிகூத் தழுங்க லேலம்; அஞ்சலே யயர்வச் சப்பேர்;
நாஞ்சிலே மதிலு றுப்பும் கலிற்றழு படையு மாமே. (௮)

(பி-ம்.) [1]வல்லி சாதக் கொடிகாரிப் புள்வ ழுத்தும். [2]ஐஞ்சையா டறிவில் லான்பேர். [3]நீஞ்சேநீந் துதல்கு டித்தல் [4]அஞ்சமே யனமஞ் சாமை; ஐஞ்சலம் பஞ்ச வாசம். [5]தூறு. [6]கலேபு ணர்ச்சி.

116 [1]வஞ்சமே யற்பங் கள்ளம் வஞ்சனை சபதம் பொய்யோ
டெஞ்சலில் கொடுமை வாளென் றியம்பிய நாம மேழாம்;
நஞ்சகார் விடம்நை தற்பேர்; நவின்றபஞ் சானனந்தான்
[2]விஞ்சசங் கரனு ரண்டும் விளங்குசி யப்பே ராமே. (க)

117 அஞ்சனந் திசைக்கார் வேழ மணியுமை யிருள்க றுப்பு
விஞ்சுமோர் கற்பி றப்பு விழிக்கிடு மருந்தா றேபேர்;
மஞ்சுபூண் வலிவ னப்பு மழையானை முதுகே யோட
மிஞ்சுத விளமை சூளை மேடளி பன்னொன் றேபேர். (க0)

118 விரியுறு மொளிசி றந்த மெல்லினந் தனிவி ரண்டாம்
வரியெது கையினிற் செய்யுள் மும்மூன்றாய் வகுத்தல் செய்தான்
திரிபுரந் தன்னைச் செற்ற செம்மலின் செம்மல் செந்தாள்
அருண்முடி சூடுஞ் செந்தி லருமருந் தையன் றானே. (கக)

[மிகை. ]கிஞ்சுகங் கிளிமு ருக்காம்; கிஞ்சித்தே யற்பங் கொங்கை.

ஞகரவேதுகை முற்றும்.

## டகரவெதுகை.

119 வலிசிறந் தொளிர்ப ராரை வரைச்சிற கரியுங் கொற்றக்
குலிசிதன் மருக னைய குருபர முருக வேளின்
கலிநெலி பரிபு ரப்பொற் கமலமென் பாதம் போற்றி
யொலிசிறந் திடும்ட கார வெ துகையின் கவியோ துற்றாம். (க)

120 வடமென்ப சிலைநா ணாலே மணிக்கோவை நகர்தாம் பைம்பேர்;
திடமென்ப வலியே மெய்ம்மை; திட்டிகண் ணுளக்கு றிப்பாம்;
குடமென்ப நகரோர் கூத்துக் கும்பங்கோக் கரும்பின் கட்டி;
முடமென்ப வெய்யோன் பாகன் முதுமகன் [3]றனக்கு மாமே. (உ)

121 அடலேபோ ராற்றல் கோறல் அணுகலே யுடன்ப டற்பேர்;
[5]மடலெழு தோடே பூவின் மட்டித ழோர்நூற் கும்பேர்;

---

(பி-ம்.) [1]வஞ்சமே சபதங் கள்ளம் வாளற்பங் கலாம்பொய் வஞ்சம். [2]விஞ்சான் முகமே சீயம்; மிஞ்சேமிஞ் சுதல்வண் டாமே. [3]முடனு. [4]உடலணு கிடல்வ லிப்பே ருடன்படல் கொலையாற் றற்போர். [5]மடலேபூ விதழே யோர்நூல் வரிபனை யேடு மாமே.

கடல்பசு வுவரி யின்பேர்; கட்சிதுஞ் சிடங்கான் கூடாம்;
உடல்பொருள் வலிகா யப்பேர்; ஓடமே யறிவு தோணி. (௩)

22 கோடலே முறிதல் காந்தள் கொள்ளுதல் வளைத லற்பேர்;
ஆடலே வார்த்தை கூத்தோ டாண்பெண்கூ [1]டுதல்கு னித்தல்;
சூடலே மூடல் வேய்தல்; சுடுவேசும் மாடு சுட்டல்;
பாடலே யிராகஞ் செய்யுள்; படாகைநீள் கொடிப டர்த்தல். (௪)

123 விடலையே வெற்றி யாளன் விளங்கும்பா லைத்தோன் றற்பேர்;
தொட்டிலையே மகளி ராடல் சொற்றதே மாலைக் கும்பேர்;
படலையே படர்ச்சி தொங்கல் பரந்திடும் வடிவி னமம்;
நடலையே நடக்கம் பொய்ம்மை நாட்டுவஞ் சனையே முப்பேர். ()

124 [2]கடைசொரி வாயி லப்பக் கடையீறு டிடமங் காடி;
விடைபெதிர்மொழியேற்றின்பேர்விடுதலென் றுரைத்தல்முப்பேர்;
[3]தொடைகணை பரவு றப்புச் சொற்றொடர் தொடுத்தன் மாலை;
[4]முடைபொதி திரட்சி நாற்ற முடைபெட்டி தவிடே கோளி. (௬)

125 விடரேகரன் [5]றார்த்த ரோடு விடத்தொழில் செய்வோர் [6]முப்பேர்;
தொடரேசொல் பழமை தாரி துவக்குட னிகள மைம்பேர்;
[7]படரேநோய் நடைநி னைப்பு பரப்பன்பு கொடிவீ ரர்க்காம்;
[8]அடரேமல் கலின்பே ரைய மலங்குறுந் தகடே முப்பேர். (௭)

126 தடைகுடங் கவசம் பாரி தடுத்தல்பூண் கடைபு ணர்ப்பாம்;
தொடையல்வா சிகைதே மாலை; தொடர்பேகட் டுதல்கட் பும்பேர்;
[9]படைமரம் பரிக்க லன்பேர் படாஞ்சுற்றும் பலகை யென்ப;
கடையமிங் கிராணி யாடல் கங்கண மிருபே ராமே. (௮)

127 குடைதலே கடைதல் தோய்தல்; குட்டியே குருளை பெச்சம்;
இடையலே யிடைதல் பட்டாம்; இட்டியே யீட்டி யாகம்;
மிடைதலே நிறைவி னொடு மிருத்திடல் நெருங்க லும்பேர்;
புடையிடம் பரரி சப்பேர்; பூட்டைமேற் கோள்தோல் சிங்கம். (௯)

(பி-ம்.) [1]டுதலே வெற்றி. [2]கடைசொரி யிடையீ றேயங் கடியப்பு கடைவா யற்பேர். [3]தொடையேபா வுழப்பு வாளி. [4]முடையேநாற் றந்தி ரட்சி முடைந் தபெட் டிகைபொ திப்பேர்—நடைகோளி கைப்ப ரிப்பேர் தவிடறு நாம மாமே. [5]றார்த்தர் விட்பு. [6]ஆமே. [7]படரேபற் றனல்து மம்நோய் படைவீரர் கொடிப ரப்பாம். [8]அடரேபை யயம்நெ ருக்க. [9]படையேமன் பரிக லன்பேர்.

128 அடியென்ப வடிமை செண்டு வெளியேதா ளண்ட நாற்பேர் ;
கொடியென்ப வல்லி வஞ்சி நீளந்திண் கொடிகாக் கைப்பேர் ;
வடியென்ப கூர்மை யோடல் ; [1]மாட்டல்மாட் டிடுதல் முட்டல் ;
பிடியென்ப நெடுங்க மூத்தல் குஞ்சரங் கவரிப் பெட்டை. (க0)

129 [2]படியங்க வடிசோ பானம் பார்நாழி குணம்ப டிப்பேர் ;
வெடியென்ப வெளிகள் ளச்ச மென்புகை வெள்ளி டிக்காம் ;
செடியென்ப விளக்கம் பாவங் குணமின்மை புதருஞ் செப்பும் ;
குடியென்ப குலம் புருவங் குடிநீ்ததலே நகரே நாற்பேர். (கக)

130 அடையிலை நகம டுத்த லப்பமிம் முப்பேர் செப்பும் ;
கிடையுவ மைப்பேர் வேதக் கிளரொலி கிடை கிடைத்தல் ;
படைநிரை படுக்கை தானை பல்லணம் படைக லப்பை ;
நடைவழி யுடனொ ழுக்கம் நற்செல்வ முப்பே ராமே. (கஉ)

131 கடிவைபாத் திரஞ்சூ தாடு கருவியென் றிருபேர் காட்டும் ;
மடிபகை [3]யடங்கல் சோம்பு வயிறுநோய் புடைவை தாழை ;
படிதலே புணர்தல் தோய்தல் ; படலமத் தியாய மூடல் ;
பொடிதலென் றுரைத்த நாமம் பொடித்தலங் குரித்த லாமே. ()

132 படிகமே நிருத்தம் பிச்சை பளிங்கென முப்பேர் செப்பும் ;
கடிகைநா ழிகையே துண்டங் கதவிடு தாழே முப்பேர் ;
சுடிகையே மகுட முச்சி சுட்டியுந் திலக மும்பேர் ;
கொடிபிதிர் கிளவி பிட்டு நூவலென் றுேதல் நாற்பேர். (கச)

133 அடலைவெண் பொடிசாம் பற்பேர் ; ஆட்டிபெண் [4]ஆட்டற் கும்பேர்;
கெடவரல் மகளிர் கூட்ட மவராட லிவைகி ளத்தும் ;
படலிகை கைம்ம ணிப்பேர் பதாகைபேர்க் குடனே முப்பேர் ;
கடவுளே தெய்வம் நன்மை ; [5]கடனேயுன் னல்பின் வாங்கல். (கரு)

134 குடிலமே ககனம் வஞ்சம் சடையுடன் வளைவே கோட்டம் ;
தடிவயி லுலக்கை வில்லுந் தண்டுமீன் றசையு டும்பாம் ;
தொடிவளை பொருப லப்பேர் சூழ்ந்தகங் கணமுஞ் சொல்லும் ;
சடிலமே குநிரை துன்றல் சாற்றிடும் வேணி முப்பேர். (கசு)

(பி-ம்.) [1]மாட்டேமாட். [2]படியென்ப குணம்பார் நாழி பகையங்க வடிசோபானம். [3]வழுங்கல். [4]ஆடற் கேயாம். [5]கடளே யுன்னுதல்பின்.

135 முடியென்ப சிமிலி சென்னி முடிநாற்று முடிகி ரீடம்;
குடிஞைபுட் பொதுவும் யாறுங் கூகையும் பதியும் வைக்கும்;
படிவம்நற் செவ்வி நோன்பாம்; பட்சியே குதிரை பல்புள்;
[1]இடிதருப் பணஞ்சு ணம்நென் மாத்தக ரம்மி டிச்சொல். (கஎ)

136 மிடலேசேய் வலிவெண் டிங்கள்; வேட்டலே விவாக [2]மிச்சை;
[3]தடறேதொண் டானு றைப்பேர் படையுறை பதகன் சாற்றும்;
கொடிறேபூ சங்க துப்பாம்; குடம்பையே முட்டை கூடாம்;
கடிறேநான் வழிவாட் புட்டில்; காட்டியே [4]பிரட்டி பன்றி. (கஅ)

137 தடாவென்ப மிடாவின் பேருந் தக்கநற் பெருமைக் கும்பேர்;
கடாவலே யெதிர்மொ ழிப்பேர் ஊர்திதூண் டற்குங் காட்டும்;
கிடாவலே வேல னுட லெறிதற்குங் கிளத்தற் பாலாம்;
[5]படாமிடு திரையே யாடை; பட்டேபட் டாடை சிற்றார். (க௯)

138 வட்டிகை யோவி யம்நால் வகையிற்சாந் தொடுகூ டைப்பேர்;
கொட்டியே [6]புறவா யிற்பேர் கூட்டமோர் மூலங் கூறும்;
பட்டிகை யரைநா ணில்லம் பயோதரக் கச்சே தெப்பம்;
தட்டியே பரிசை காவல் சாற்றுறும் பலகை முப்பேர். (உ0)

139 [7]இடக்கரே மறைச்சொல் கும்பம்; இடங்கழி நெருங்கல் தூர்த்தர்;
கிடைத்தலே[8]யெதிர்தலொன்றைக்கிடைத்தலென்றேதற்கும்பேர்;
கடைப்பிடி மறப்பிலாமை கருதிய தேற்றஞ் சொல்லும்;
படப்பையே தோட்டம் நாட்டிற் புறம்புமென் றேதற் பாலாம். ()

140 கட்டலே யிறுக்க லார்த்தல் களைதலே தடைகள் ளப்பேர்;
தொட்டல்கை தீண்ட லுண்டல் தோண்டலென் றேதல் முப்பேர்;
தட்டலே தடையே கிட்டல்; தட்டம்நச் சுப்பல் தாலம்;
கொட்டலே யப்புல் மொத்தல்; [9]குடத்திமுல் லைப்பெண் ணோர்மா,

141 நாடென்ப [10]மருது வையம் நவிர்பின்ன [11]லணியார் வைப்பேர்;
தாடென்ப தலைமை கோவில் தளிர்துறல் பெருமை யாற்றல்;

(பி-ம்.) [1]இடிதரு மணஞ்சு. [2]பேற்றல். [3]தடறுகூன் றொண்டா ளுமை. [4]பிராட்டி. [5]படாமிடு திரையா டற்பேர். [6]புரவா. [7]இடக்கரே நெருங்கல் கும்ப மிடங்கழி மறைச் சொல் தூர்த்தர். [8]யெதிர்த்த. [9]கொடும்பைதாம் பருவி குண்டம். [10]மறிகு. [11]லணிபூர் வைப்பேர்.

ஏடென்ப மகியே குற்ற மியன்றகண் ணிமைபூத் தோடாம் ;
பீடென்ப தகைவே யொப்பே வலியொடு பெருமைக் கும்பேர். ()

142 ஏடகம் பலகை பெண்ணை நல்லாடை யிலாங்க விப்பேர் ;
பாடகஞ் சிவப்பு நீழ லொலிபாத கடகம் பண்ணும் ;
கோடக முடியு றுப்புங் குலவுறு பரிக்குங் கூறும் ;
மாடகஞ் சகோட யாழ்ப்பேர் வலிமுறுக் காணிக் கும்பேர். (உச)

143 ஆடென்ப மேடம் வெற்றி யாடவர் நிருத்தம் நாற்பேர் ;
சேடென்ப பெருமை நன்மை திரட்சியோ டழகுஞ் செப்பும் ;
சூடென்ப கண்ணிற் சூடே சூட்டேபுட் டலைச்சூட் டிப்பேர் ;
[1]மோடென்ப வுதரம் போழ்தல் பெருமைமே [2]டெனுமொ ழிப்பேர்.

144 மாடுபொன் செல்வம் பக்கம் ; வட்டணை யறுத்தல் மொத்தல் ;
கோடிகந் துகில்பூந் தட்டே [3]குண்டிகை யதற்குங் கூறும் ;
பாடிடம் பெருமை யோசை படுதல்பக் கம்பண் பென்றும் ;
ஓடென லலவு மாமென் றுரைத்தலோ டுதல்கெ டற்பேர். (உசு)

145 ஊட்டியே விலங்கின் கன்றாண் ஒளிர்மழை மிடறே முப்பேர் ;
கோட்டிகண் பார்கு றிப்பேர் கூட்டம்வா யிற்குங் கூறும் ;
பாட்டியே நரிநாய் பன்றி பாணிச்சி பாட்டி யைம்பேர் ;
நாட்டியங் குறிப்பே யாடல் கல்வடி வம்முப் பேரே. (உஎ)

146 மட்டென்ப நறவே யெல்லை வாசமா யுதமும் வைக்கும் ;
கட்டென்ப மிகுதி கட்டுக் களைதலே குறிக்கா வற்பேர் ;
புட்டங்கோ டிகமே காகம் பொருந்துறு நிறைவும் போற்றும் ;
குட்டம்பூந் தடம்கோ யாழம் ; கொடிஞ்சிதேர் தேர்க்கூம் பாமே. ()

147 ஒட்டென்ப படைவ குப்பும் அற்பமு முரைக்கற் பாற்றே ;
பட்டடை யடைகு றட்டின் பால்விளை பண்ட ராசி ;
கட்டளை நிறைகல் லொப்பே யிட்டிகை யியற்ற லாணி ;
சட்டகந் தட்டம் பாயல் ; சாடுவிற் புன்னர் பாண்டில். (உஅ)

148 [4]ஒடுக்கமே யடக்கம் பாந்தல் ; ஒடுங்கியே முளைகூம் பற்பேர் ;
கடுத்தலொப் பையம் வேகங் கலந்துறச் சிந்தற் கும்பேர் ;

---

(பி-ம்.) [1]மேடென்ப. [2]டெனவும் போற்றும். [3]கெண்டிகை. [4]ஒடுக்கமே முடியச் செய்தல் அடங்கல்பாந் துதலோ டும்பேர்.

தொடுப்புழு படைவ ளோப்பிச் சொற்புறங் கூற னாற்பேர் ;
[1]வடுச்செம்பு தழும்பு குற்றம் வண்டுமா வடுவேச் சாமே. (௩௦)

149 உடுக்கையோர் பறையே யாடை ; [2]ஒடுக்கலே சொரிவொ சித்தல் ;
கடத்தலே நடத்தல் தூண்டல் காணுறத் தாண்டல் முப்பேர் ;
தொடுத்தலே வளைத்தல் பற்றல் சொற்கூட்டல் பிணித்தல் நாற்பேர் ;
அடுப்புயர் பாணி நாட்பேர் அச்சஞ்சல் லிப்பேர் வைக்கும். (௩௧)

150 படுகரே பள்ளங் கேணி பகர்கமண் டலமே முப்பேர் ;
முடுகலே விரைவே மல்லல் மூட்டுதல் மிகுதி யச்சம் ;
கடுமையே [3]மிகுதி வல்லை கொடுமையே யகறல் காட்டும் ;
வடுகுய ரிந்த ளப்பண் மருதயாழ்த் திறத்தோ ரோசை. (௩௨)

151 மாடமே யுழுந்தோ டில்லாம் ; வட்கலே நாண்கே டாகும் ;
பாடமே கலைப யிற்றல் பிறங்கொளி யிரண்டும் பண்ணும் ;
கூடமில் மறைவு வஞ்சங் குவட்டுச்சி [4]கொல்சம் மட்டி ;
சேடனே வற்பேர் பாங்க னனுசன்பாம் போர்சா திப்பேர். (௩௩)

152 கூடலே பொருந்த லூடல் மதுரைமா நகருங் கூறும் ;
பாடைவாள் தீட்டுஞ் சாணை தேயச்சொல் பகரி ரண்டாம் ;
கீடமே யளியே கேழல் கோற்புழு வெனக்கி ளத்தும் ;
பீடிகை யாவ ணம்பூண் கொள்கலம் பீட முப்பேர். (௩௪)

153 ஆடவ ரிளைஞர் தம்பே ராம்புரு டற்குங் கூறும் ;
பேடலி காம னூடல் பிறங்கிய நகரே முப்பேர் ;
பாடலி கள்ளே யோரூர் ; பட்டிமை கரவே வஞ்சம் ;
கோடணை வாச்சி யப்பேர் கொடுமைக்கு மொலிக்கும் பேரே. (௩௫)

154 சுட்டியே பட்டஞ் சுட்டி சொற்றநா வுடனே பங்கி ;
செட்டிவா ணிகன்செவ் வேள்பேர் ; [5]தெட்டியே நாய்கன் யானை ;
பட்டியே யிடம்சு வாப்பேர் [6]புகர்ந்தகள் ளுக்கும் வைக்கும் ;
வட்டிலே புட்டில் நாமம் வழிகூடை [7]புடன்மூப் பேரே. (௩௬)

(பி-ம்.) [1]வடுத்தழும் பேச்சு வண்டு வான்கூர்மை வடுச்செம் பாமே. [2]ஒடுக்கலே யடங்க லோசை. [3]வல்லை கூட்டம். [4]கோல்சம் மட்டி. [5]தெட்டிவா ணிகன்யா னைப்பேர். [6]படர்புதர் கள்ளே சோரம். [7]வட்டித் தற்பேர்.

155 கட்டியே மகிழ்ச்சி யோர்புள் கருப்புவட் டுடனே முப்பேர் ;
கிட்டியே தலையீற் றாவுங் கிளத்திய தாளத் தும்பேர் ;
தொட்டியே யழகு வாயிற் சொற்றகள் ளெனவே முப்பேர் ;
[1]விட்டிலே கொலையி னுமம் விளக்குறு பதங்க மும்பேர். (௩௭)

156 முட்டையே தவிடண் டப்பேர் ; முநிவல் பெண் ணுப்செந் நாயசம் ;
திட்டையே யுரலு மேடுந் திண்ணையும் நண்ணு மப்பேர் ;
தட்டையேய் தினைத்தாள் கிள்ளை தனைக்கடி கோல்தீ முண்டம் ;
ஒட்டையே நெடுங்க ழுத்தல் ஒருமாஞ் சாண்முக் [2]கோலாம். (௩௮)

157 இடங்கரே குடங்கர் தூர்த்த ரெய்து நீர் முதலை முப்பேர் ;
முடங்கலே மடங்கல் கைதை மூங்கில்கோ [3]யாங்கு நாற்பேர் ;
படங்குமேற் கட்டி சேனை பகர்பெருங் [4]கொடிபுள் ளோசை ;
விடங்கமேர் கொடிகொ டுங்கை மேன்முக டிளமை யாண்மை. ()

158 சூடிகை கிரீட முச்சி ; சுடர்க்கடை மின்மினி மஞ்ஞை ;
சேடிவிஞ் சையரூ ரேணி செப்பிய விருளை முப்பேர் ;
மோடியுள் ளத்து வஞ்சங் காநிகாள் மூதே விப்பேர் ;
தாடிம மென்ப தாது மாதுளை சந்தா னும்பேர். (௪0)

159 ஆடியோர் மாதங் காற்றே கண்ணுடி படியா ணிப்பேர் ;
சாடியே யாடை தாழி ; சடைவேணி வேரோர் பூடாம் ;
தேடியே தொழிலி லாபம் ; சேடமே சிறுமை மிச்சில் ;
[5]காடிசோ றாறு காய்நெப் ; [6]காட்டமே சமித்து வாசி. (௪௧)

160 மாட்சியே [7]திருந்தல் குற்ற மமைதியே [8]நிரப்பே மானம் ;
காட்சியே யறிவி னும மின்புறக் காணற் கும்பேர் ;
பூட்சியே யுரிமை [9]யின்பேர் பொருந்துறு முடற்கும் பேற்றும் ;
ஞாட்பெனும் பேரே கூட்டம் நற்பாரம் படைபோர் நாற்பேர். ()

161 விடம்விடத் தொழிலே யால மேவுறுங் [10]திமாக்கி யப்பேர் ;
சடமுட லிருமூன் றேபொய் [11]சாற்றுறுங் கொடுமைக் கும்பேர் ;

(பி-ம்.) [1]விட்டிலேகொலைபதங்கம் ; வீடெயில் முத்தி யின்பேர். [2]கா லாம். [3]ய் தாங்கோ லைப்பேர். [4]கொடியுள். [5]காடிசோ றாறு காய் நெய் கஞ்சி முத் தடனே ரூர்தி. [6]காட்டந்திக் ககவங் கட்டை. [7]திருத்தல். [8]ரூற்பேர்.? [9]தாயம் ; பொடிதூசன் மூளை[?] சாம்பல். [10]நியாச்சி யப்பேர். [11]தண்ணளி.

சுடரொளி தளிர்வி ளக்குத் தூய்க்கனல் வெய்யோன் றிங்கள் ;
மடமறி யாமை [1]சத்திர மனைமுனி வாசம் நாற்பேர். (சங)

162 வேட்டுவன் மகநாள் வேடன் விளக்குறுங் குளவி முப்பேர் ;
சேட்டையே விசாகங் கேட்டை சீர்கேடி முற்றில் நாற்பேர் ;
கேட்டையே கலதி யோர்நாட் கிழத்தியென் றறைதல் முப்பேர் ;
நாட்டமோர் பண்கண் ணுடல் நாந்தக மூளப்பா டச்சம். (சச)

163 நடுமையம் நடலோர் நாடி ; நட்டமே கேடுங் கூத்தும் ;
கடுவிடம் விரைவு முள்ளோ டரிதகி கசப்போ டைம்பேர் ;
கிடுகொரு பறையே சட்டம் ; கிடக்கைபூ தலம்பா யற்பேர் ;
படுதலே யொலியின் றுதல் பகர்தலுண் டாதல் பூத்தல். (சரு)

164 சடாமே வயிறேநந் திப்பேர் ; [2]தடாரிபல் பறைமூ ழாவாம் ;
[3]தொடரே நூல் செய்பு ளாகும் ; துடிப்பேகை முலேயி ரண்டாம் ;
விடலேகற் பிளப்பு விள்ளல் ; மேடுமேம் பாடு யர்ச்சி ;
அடகேபொன் றீடாக் கொள்ளல் இலைக்கறி யிரண்டு மாமே.(சசு)

165 இடும்பரே நிருதர் கீண்பர் ; ஈட்டியோர் படைவ ளர்த்தல் ;
கிடங்குநீர் நிலைபல் பண்டங் கிளர்சாலை கிளத்தற் பாலாம் ;
குடந்தமஞ் சலிதி ரட்சி ; குடஞ்சுட்டே சுராபி மேதி ;
மடங்கல்கூற் றிடிநோய் சீயம் வடவைதா ரூழி தாழை. (சஎ)

166 தடவென்ப பெருமை யோம குண்டமே வளைவுஞ் சாற்றும் ;
விடபமே மாக்கொம் பேறு விளங்குதூ றெனவே முப்பேர் ;
துடவையே தோட்டஞ் சோலை ; துடாவென்ப துழவே மஞ்ஞை ;
வடவைதீ குதிரைப் பெட்டை யுவாப்பிடி பெருமை வைக்கும். ()

167 துடியேலம் பறைநுண் போது துடிப்புட னேழு மாதர்
நடியாடல் செவ்வே ளாடல் நாட்டிய வற்ப மேழ்பேர் ;
படிறேபொய் கொடுமை கள்ளம் ; [4]பட்டாரகன்றே வாசான் ;
[5]வடிவேகன் மேனி மெய்ச்சொல் ; வடிதலே யொழுகல் நீளம். ()

(பி-ம்.) [1]சித்திர. [2]சட்டமென்ப கொடுமை காயம். [3]தொடருரை செய்யு ளாலாம். [4]பட்டார காசா த்ண்டர்? [5]வடிவமெய் மேனி வேள்வி.

168 கோடரங் குதிரை யெட்டி நூரங்குசேகரம் புடனே சோலை
நாடுறு மயிர்ச்சாக் தாலம் நவிற்றுநா மங்க ளேழாம்;
பாடலஞ் சபதம் வாசி பாதிரி களிப்புச் சோணம்;
கேடசம் பரிசை வேறு [1]கேடிலூர் பலகை செப்பும். (௫0)

169 [2]ஓடையே நீர்க்கி டங்கோ டொளிர்மலைச் சரிமால் யானை
மாடையிற் குயிற்றும் பட்ட மாமொன்றே டிருமூன் றேபேர்;
கோடைமேல் காற்றி னோடே குதிரைவெண் காந்தள் வேனில்;
வாடையே நீடும் வீதி வடகாற்றுந் தானு மாமே. (௫௧)

170 கடகமே சேனை வட்டம் கைவளை பரிசை யோர்கூத்
தடகருந் திடும்பா னைக்கூட் டம்மதில் படைவீ டெண்பேர்;
படகமோர் வாச்சி யப்பேர் கவரிமாப் [3]பதலை பண்ணும்;
வடகமே சரும மத்த [4]வாளமென் றிரண்டு மாமே. (௫௨)

171 பாடிபா சறைநா டாயர் பாடியே செறிப தாதி
வாடிலாப் பேரூர் மெய்க்கே வனைகவ சங்க ளாறும்;
[5]நாடிநா சிகைந ரம்பே நவிற்றுறு துணைபெண் கூந்தல்;
[6]கோடியெண் புதுமை தூசாம்; [7]குடிமியே வெற்றி யுச்சி. (௫௩)

172 முடலையே பெருமை வெய்ய முடைநாற்றந் திரட்சி யுண்டை
யெடுமுரா டென்று றட்டோ டெய்துறுங் கழலை யேழ்பேர்;
பிடகநூல் வேதத் தின்பேர்; பெட்டலே விரும்பல் வேட்டல்;
மடைவயல் மடையே யன்ன மணிப்பணி கடைப்பூட் டும்பேர். ()

173 புட்கரம் நிறைவு வாள்நீர் புட்குழு மருந்தே [8]நீத்தம்
முட்கம லம்பி பக்கை நுனிபாண்ட முகம்பத் தேபேர்;
கொட்புறல் திரித லோடு சுழற்சியென் றிருபேர் கூறும்;
பெட்புயர் விருப்பம் பீடம்; பிடரேதோண் மேலெ ருத்தம். ()

174 தட்டேநேர் நடுப்பேர் [9]முட்டுச் சாற்றிய பரிசை முற்றில்
[10]வட்டமோ டுயர்ந்த குற்றும் வளைவுட னேழ்பே ராகும்;

---

(பி-ம்.) [1]கேடிலாப். [2]ஓடையே பட்டந் தாரு கிரிச்சரி கரிநீ ரோடை. [3]பணவை பன்னும். [4]வாளமும் வடக மும்பேர். [5]நாடிபெண் கூந்தல் பாசி துணைநாசி கைந்ந ரம்பாம். [6]கோடியே. [7]குடுமிவில். [8]நீர்த்தம். [9]முட்டுத் தட்டோலை. [10]வட்டப்பே ரொடுநற் றப்பேர் வளைவென் மெண்பேர் வைக்கும்.

[1]சுட்டலே பொறுமை யெண்ணம்; [2]தோட்டியங் குசங்க பாடம்;
எட்டொரு கணித மெட்டல்; எட்டிகாஞ் சிரமோர் சாதி. (௫௬)

175 கோடென்ப வயல்வ ரம்பூ ஞாய்கொம்பு விலங்கின் கொம்பு
நீடுஞ்சங் கசலத் தாச்சி நெடுங்கரை மரக்கொம் பெண்பேர்;
தோடென்ப தொழுதி பூவின் [3]றோட்டணி குழைப்பேர் தானும்
நாடும்பச் சிலையி னோடே வளைவெனு நாம மாறே. (௫௭)

176 கடமேவான் சுரம தங்கோற் கணக்கயி றுவாக்க டப்பு
குடம்நீதி யுடல்பொன் வெற்பின் கொழுஞ்சாரல் பண்ணென் றேபேர்;
தடமேசெல் வழித டாகம் தடக்கரை பெருமை யானை
நடவிய சரிவி ளைச்சல் [4]கவில்வளை வுடனேழ் பேரே. (௫௮)

177 பட்டமே வழிவி லங்கின் பாயல்கே டகந்து சோடை
திட்டநற் பதவி யெஃகங் கவரிமாத் திகழெண் பேரே;
வட்டமே பரிசை தாழ்வு வலைபங்கைம் மணித்து சூர்கோள்
ஒட்டுநீர்ச் சாலெ ழுத்தூத் தீரட்சிபோட் டம்பேர் பத்தே. (௫௯)

178 இடமேழு [5]விடம்வி சால மிடப்புறம் பெருமை [6]செல்வம்
திடமேவ நெருங்க லென்னச் செப்பிய நாம மாறும்;
[7]படமேசம் படஞ்சிம் புட்செய் படம்யானை முகப டாத்தோ
டிடமார்பாந் தட்ப டப்பெ ரெழுது படமைந் தேபேர். (௬0)

179 [8]உடையென்ப குடைவேல் செல்வ முடிக்கையே மூள்பூ ராடம்
நடைசரண் கலனை வாசி நற்கவ சம்மொன் பான்பேர்;
குடையென்ப கவிகை கல்லை குடமாவே ளாடல் நாமம்
அடைமிதி யடிமே விட்ட கோட்டையி கையைம் பேரே. (௬௧)

180 உடுவிண்மீன் கிடங்கே நாவாய் போட்டுக்கோ லம்பி னீர்க்கோ
டடுகணை யிளம்பிஞ் சென்ன வுரைக்குநா மங்க ளாறும்;
படுமரக் குலையே கள்ளுநப் பரவுநீர் நிலைசும் பத்தோ
டேடுகன்மை வெள்ளி லைப்பே ரியம்புறும் பொய்கை யேழ்பேர். ()

(பி-ம்.) [1]சுட்டென்ப. [2]சுடலேகாட் டிடலெ னும்பேர். [3]ரோட்டணை. [4]கவில்வளை. [5]விடங்கள் செப்ப. [6]மல்கல். [7]படமேபை குழி தாசூர் படம் விடு படமு னந்தாள். [8]உடையேமுன் குடைவேல் செல்வ முடிக்கைதோள் கலனை வாசி—யடலார்வெஞ் சுவசம் பூராட நாளெனு மொன்பான் பேரே.

181 கோட்டமே படப்பை நாடு கோயிலவ் வியமான் கொட்டில்
நீட்டுவாத் தருமம் [1]பாசம் நீர்நிலே மருதத் தூர்யாழ்
நாட்டுகோண் குரங்கே வாவி நல்வயல் மூவைந் தேபேர் ;
ஒட்டமே ஓடதடே தோல்வி யொழுக்குறும் வீதி முப்பேர். (௬௩)

182 கடிமணம் விரைவு கூர்மை காப்பச்ச மெழில்வி ளக்கம்
வடிவக லல்குல் காலம் வரைவுபேய் சடிப்பு வெம்மை
வெடிகரிப் பேசி றப்பு மிகுதிகற் புதுமை பையம்
ஒடிவில்விம் மிதம்பு ணர்ச்சி யொன்றெழி யிருபான் பேரே. (௬௪)

183 தகைசெறி டகர மாய வெழுத்தெது கையினிற் சார
நிகரறு கவிதை [2]யேமொன் பானென நிகழச் செய்தான்
முகிழ்முலேக் குறமின் கேள்வன் மொய்ம்மலர்ப் பாதம் போற்றும்
அகனில மேத்துஞ் செந்தி லருமருந் தையன் றானே. (௬௫)

[மிகை.] 1. இடைநடு நிறையே யானே யிடமேறன் ணுசுப்பே யையம் பேர். 2. ஈடென்ப பெருமை யொப்பே வலிகுழை வெனுநாற் பேரே. 3. கேடமே ஒளியா ரென்ப. 4. கடிப்பகை யேவி ளாவுங் கடுகெனு மிருபே ராமே. 5. கூட்டமே குழுப்பின் ஞெக்குப் பருதுவ முப்பேர் கூறும். 6. நெடு மைவார் தலின்பே ரோடே நெறிகரு மயிரு மாமே. 7. தேடுபொன் றேடற் கும்பேர் செய்ம்முயற் சிக்கும் பேரே. 8. கோடணே வாச்சி யப்பேர் கொடு மைக்கு மொலிக்கு மாமே.

டகரவேதுகைமுற்றும்.

---

(பி-ம்.) [1]வாசம்(?) [2]வெட்டெட் டென்றாய்.

# ணகரவெதுகை.

184 [1]வளங்கிள ரொளிர்ப சும்பொன் வரையுறழ் தோளுங் கண்ணும்
உளங்கிளர் பன்னி ரண்டோ டுரைக்குமீ ராறுங் கொண்ட
தளங்கிளர் நெடிய வேலோன் றண்மலர்ச் சரணம் போற்றிக்
[2]களங்கற வருண கார வெதுகையின் கவியைச் சொல்வாம். (க)

185 இணரேபூப் பூம்ப ராக மியன்றபூங் கொத்தே முப்பேர்;
புணர்வேதோய்ந் திடலி சைப்புப் [3]பொருபவென் றேதற் கும்பேர்;
துணரேபோ தும்ப ராகம்; [4]துண்டில்வேய் சூழ்தற் கும்பேர்;
உணர்வேநல் லறிவே யூட றீர்தற்குந் தெளிவுக் கும்பேர். (உ)

186 மிண்டலே நிறைவி னும்மு நெருக்குதற் கும்வி ளம்பும்;
கண்டல்கே தகைமுள் ளிப்பேர்; கவிச்சிபொண் மழுவு ளிப்பேர்;
கொண்டல்மே கங்கீழ் காற்றும்; கொண்மூவென் பதுவின் மேகம்;
வண்டல்பெண் கூட்ட மாடல்; மாண்புமாட் சிமைப்பேர் நன்மை.

187 [5]சண்டனே யலிகால் வெய்யோன்; தணித்தல்சே மித்தல் [6]தீர்த்தல்;
குண்டமீ ரெட்டாண் டிற்பெண் குளமாழங் கும்பம் பன்றி;
புண்டா றுதற்கு றிப்பேர் பொரலிவுறு கழுகும் போற்றும்;
கண்டகம் வயிர முள்வாள் கதிர்விடு சுரிகை நாற்பேர். (ச)

188 [7]பேணலே கருத லாசை; பிணர்கோங்கு நெருக்கங் கட்டி;
கோணலே மாறு பாடே கூன்சிந்து வளைவே நாற்பேர்;
காணலே குறித்தல் பார்த்தல் கழலிணை பணிதல் முப்பேர்;
மாணவே நன்மை யின்பேர் மாட்சிமை தனக்கு மாமே. (ரு)

189 ஆணமே குழம்போ டன்பாம்; [8]அணில்வரிப் புறங்காற் றென்றும்;
ஓணமே யோணு மாறும்; உண்மையே நியதி சொல்லே;

---

(பி-ம்.) [1]வளங்கிள ரொளிமொய் நீப மாலைதோ யாறி ரண்டென்—றுளங்கொடோட் கிரிபு மாறு முகமுங்கொண் டொளிரும் புத்தேள்—தளங்கிள ரடிதோய் செம்பொற் றாமரைச் சரணம் போற்றிக். [2]களங்கற ணகரத் தற்ற. [3]பொருப்பென்றே தற்கும் பேரே. [4]தூண்டல்வேய். [5]சண்டனே யலியே காலன் றபனனென் றேதற் கும்பேர். [6]தீர்தல். [7]பேணலே கருத லாசை மிகுத்தறல் பேசு முப்பேர். [8]அணங்கீழ்வாய்ப் புறமுன் னுவாம்.

காணமே பரியூண் செக்கோர் கண்ணீர்பொன் னளத்தல் கொள்ளாம்;
கோணமே குதிரை வாளங் குசம்வளை வுடனே மூக்காம். (௬)

190 வண்மையே வளங்கொ டைப்பேர் வலிபுகழ் குணமே வாய்மை;
ஒண்மையே யறிவு நன்மை [1]யோக்கிய வழகே மூப்பேர்;
வெண்மையே யறிவி லாமை [2]விளர்தன்மை கற்கண் டென்ப;
எண்மையே யிறுமாப் பேந்தல்; எண்டோளி துர்க்கை காளி. (எ)

191 அண்டம்வான் பறவை முட்டை யமர்த மிருக்கை மத்தாம்;
பண்டம்பொன் பரிகா ரப்பேர்; பணவையே பாண்டி டிப்பேர்;
துண்டஞ்சா ரைப்பாம் பின்பேர் துணியொடு வதன மூக்காம்;
கண்டென்ப கரும்பின் கட்டி கழலைகண் டித்தற் கும்பேர். (அ)

192 மண்டலம் பருதி நாடு வட்டமிம் மூப்பேர் வைக்கும்;
அண்டமே பகைவர் வானோ ராபரென் றுரக மூப்பேர்;
சுண்டனே சதைய நாளுஞ் சூறனும் வேறு காட்டும்;
குண்டலம் விசும்பே வட்டம் குழைபெனு மூப்பே ராமே. (௯)

193 இண்டையே பதுமம் மாலை [3]யேணமான் வலியி ரண்டாம்;
தொண்டையா தொண்டை கோவை சொற்கள முவாத்து திக்கை;
உண்டையே திரளை பிச்சை யுறுதிரள் படையு மப்பாம்;
கொண்டையே மயிர்மு டிக்கு மிலந்தையின் கனிக்குங் கூறும். ()

194 திண்டியே களிறு பூமி தெழித்திடும் படக மூப்பேர்;
பிண்டிபிண் ணாக்க சோறு த நுப்பணம் புணர்தம் மென்மா;
[4]சுண்டியே சுக்கோர் பூடாம்; [5]துணியறை சேறே தூக்காம்;
கண்டிகை பதக்கம் வாகு வலயமே கலனெய் செப்பாம். (௧௧)

195 பண்டேழுன் பேப மூப்பேர்; [6]பணிலஞ்சஞ் சலம்வெண் சங்காம்;
கண்டூதி காஞ்சொ றிப்பேர் தினவிரு பேருங் காட்டும்;
வண்டேவெண் சங்கங் குற்றம் வளையளி [7]வாளி யைம்பேர்;
செண்டேகூர் ஙமப்பேர் வாசி பூர்வெளி பூச்செண் டேபேர். (௧௨)

---

(பி-ம்.) [1]யொழுங்கெழி நயக்கும் வைக்கும். [2]விளர்வேகற் கண்டே தன்மை. [3]யெண்மானம் வலியி ரண்டாம். [4]சுண்டியே சுக்கோர் பூடாம் சுவற் றற்குஞ் சொல்லற் பாற்றாம். [5]துணியறை சேதத் தூக்கு. [6]பணிலமே சலஞ்ச லம்பேர் பாணிறச் சங்கே யென்ப. [7]வாளே.

574 வழியென்ப திடமே மார்க்கம் வருமக வுடன்பின் னும்பேர் ;
குழியென்ப தகழ்தல் குக்கி ; குழிசியே மிடாப்பா னைப்பேர் ;
பழியென்ப பழித்தல் குற்றம் ; பழிச்சல்தீச் சொல்வ ழுத்தல் ;
[1]எழிலென்ப தழகே வள்ளி ; எழிலியே வள்ளல் மேகம். (௧௩)

575 உழவையே புலிமே திப்பேர் ; உழுதலே [2]யுழுத ருய்யல் ;
தொழுவென்ப துழலை தானே ரேவதி நாளுஞ் சொல்லும் ;
முழுமக னறிஞன் மூடன் ; [3]மோழையே காடி கஞ்சி ;
உழுவலே [4]யாரா வன்போ டோங்கெழில் புணர்ச்சி [5]நாற்பேர். (௧௪)

576 ஊழியே யுகாந்தம் பூமி ; [6]உழப்பென்ப வலியுச் சாகம் ;
தோழியே யரக்குப் பாங்கி ; சூழேனாய் [7]சூழ்த லாகும் ;
பூழியே புழுதி சேறும் ; பூழிலே யகில்பூ மிப்பேர் ;
காழிய [8]ரப்ப வாணி கர்க்கும்வண் ணார்க்கும் பேரே. (௧௫)

577 வழக்கென்ப மறத்த லின்பேர் வழும்பெனும் பேரு மாக்கும் ;
நிழற்றலே நுணுக்கம் நீழல் நிழல்செய லெனவே மூப்பேர் ;
கிழத்தியே மனைவி முல்லை மருதப்பெண் ணெனக்கி ளத்தும் ;
பழுப்பரி தாரத் தின்பேர் முதிரிலைப் பருவ மாமே. (௧௬)

578 தாழையே தெங்கு கைதை ; தழல்கிளி கடிகோல் செந்தீ ;
ஏழைபெண் மிடியன் பேதை ; இழையேபூ ணிழைத்த னாற்பேர் ;
நூழையே வருவாய் நுட்பஞ் சாளர நுவலற் பாற்றே ;
மாழ்கலே யிரங்கல் மோகம் வழுத்துரோ தனமு மாமே. (௧௭)

579 ஈழமே சிங்க ளம்பொன் னிழுக்குறுங் கள்ளே முப்பேர் ;
வேழமே கொறுக்கை மூங்கில் வெற்றிமால் யானை கன்னல் ;
காழகங் கருமை யாக்கை கழுதைதூ சுடன்க டாரம் ;
கீழிடங் கயமை பள்ளங் கிழக்குட னாற்பே ராமே (௧௮)

580 நீழலே யொழுக்கம் வெள்ளி நிலவேயாற் பதமே நாற்பேர் ;
சூழலே யிடம்வி சாரஞ் சொற்கூழைப் படையே மூப்பேர் ;

(பி-ம்.) [1]எழில்மணி யிளமை நாம மியன்றநல் வள்ளிக் கும்பேர். [2]கழுத. [3]மோழையே காடி கஞ்சி மொள்ளுநீர் மோழைக் கும்பேர். [4]யெழுமை பெற்றி. [5]பாண்பாம். [6]யூகமென் றறைதன் மூப்பேர். [7]கீலக்கஞ் சூழ்தல். [8]ருப்பு.

ஞாழலே [1]பலினி கோங்கு நாறுங்கத் தூரிக் கும்பேர் ;
சாழலே விளையாட் டோடே சாற்றுங்கா டிக்கும் பேரே. (௧௯)

581 உழுந்துசொற் படிறி ஞம மோது று மாடத் தின்பேர் ;
கொழுங்கிரி வரையே மவ்வல் ; கோழியே யுறையூ ரோர்புள் ;
கழங்குசே யாட லிந்தி யங்கொடிக் கழலோ ராடல் ;
வழங்கலே நடத்தல் நீட்டல் வருமுறை யுலாவ லாமே. (௨௦)

582 உழைக்குத [2]லழுங்கல் வீழ்ந்தே யுழக்குற லூஞற்றே முப்பேர் ;
சுழற்சியே கறங்க லாழித் தொல்படை யோர்காற் றும்பேர் ;
தெழித்தல்வா யால தட்டல் செப்புறு மோசைக் கும்பேர் ;
[3]ஒழுக்கறென் பதுவ ழிப்பே ரொன்றடைக் கலழு மாமே. (௨௧)

583 கழுறுவீ றென்னு நாமங் குழவியுந் தூம்புங் காட்டும் ;
கிழவனே யறிஞன் மூத்தோன் மருதத்தோன் றற்கி ளத்தும் ;
தழைதழைக் குறலே பீலிக் குடையெனச் சாற்றற் பாலாம் ;
நுழையெனு நாம நுண்மை நுழைவாயி றனக்கு மாமே. (௨௨)

584 காழென்ப மணியின் கோவை கற்பரல் வித்துச் சேகு
நீள்கத வின்றாழ் காந்தி நிறத்தமா லே[4]கோ லெண்பேர் ;
கேழ்வியாழ் செவியே கல்வி ; கெழுவென்ப நிறங்கெ ழூஉப்பேர் ;
வேழ்வியே மகநாள் பூசை வேள்விக்குண் டங்கொ டைப்பேர். (௨௩)

585 [5]பாழியே வழிவி லங்கின் படுக்கையூர் பெருமை பாயல்
வாழிய தவத்தோர் வாசம் மலைமுழை யகல மெண்பேர் ;
சூழியே சுனையே வேலை தும்பியின் முகப டாப்பேர் ;
[6]நாழிநா ழிகைய ளக்கும் நாழிவேய் பூரட் டாதி. (௨௪)

586 ஆழியே கரைகள் வட்டம் ஆர்கலி நேமி வீகம்
பாழிசேர் கரித்து திக்கைந் றனியெனப் பகாற் பாற்றே ;
தாழியே பரணி நாட்பேர் சாகரங் குடங்கர் முப்பேர் ;
[7]தூழிலே கொலைதோல் செக்கு நுவறிறை கொடிக்கோற் றூன்பேர்.

(பி-ம்.) [1]புலினி. [2]லமுங்கல். [3]ஒழுக்காறே வலியி ஞமம். [4]தோ லெண்பேர். [5]பாழியே வலிவி லங்கின் படுக்கையே பெருமை பாயல்-வாழிய தவத்தோர் வாசம் மலைமுழை யகல மேயூர்-தாழியாழ் கடலே யாழே சாற்றிடும் பாணி லாரூர்-வீழிலான் மாலின் பாடே விண்ணெனும் பன்முப்பேரே. [6]பாழிநீர் நிலையி ஞேடு பட்டமென் றைம்பே ராமே. [7]தூழில்தோல் வணிகன் கோற னுவல்கொற்றன் றிணைசெக் கியானை.

587 ஊழ்த்தலே தசையி னும்மம் உறுபத னழிவே தீர்த்தல்
தாழ்ப்பிலா நினைத்தல் செவ்வி சாற்றிடும் பேரோ ரைந்தாம்;
வாழ்த்தலே வழுத்த லாசி; மாழ்குமான் றலைநாள் மாழ்த்தல்;
ஆழ்த்தலே மடிமை [1]செற்பேர்; அழுக்காறே பொறாமை பொய்யாம்.

588 மாழையே புளிமா வோலை மடமைபொன் னுலோகக் கட்டி
சூழெழில் மடவா ராயம் சொற்றன திரட்சி யெண்பேர்;
கூழைபொன் னுரகஞ் சேறு கூந்தல்வெம் படையு றுப்பே
தாழுறுஞ் சிறகே பீலி நடுவெனச் சாற்றெண் பேரே. (உ௭)

589 அழுக்கெனு நாம மாமை மலினமு மறையற் பாற்றே;
மிழற்றலே நிரம்பா மென்சொல் மேவுறு மொழிக்கும் பேசும்;
இழைத்தலே கூற்ற மாற்ற லியம்புத னினைத்த னாற்பேர்;
விழுப்புயர் சிறப்புச் சீர்மை விளம்புறு மிடும்பை யாமே. (உஅ)

590 [2]இன்புயர்ந் திடுழ கார வெதுகையிற் சிறந்த செய்யுள்
முன்பெற வொன்றொ ழிந்த மூவொன்ப தாகச் செய்தான்
பன்கிளர் விரிதோட் சூர்மாப் பகவயிற் றாந்தோன் பாதம்
அன்புற வணங்குஞ் செந்தில் அருமருந் தையன் றானே. (உகூ)

[மிகை.] 1. கொழுவென்ப கொழுகொ ழுத்தல் கோழுழுங் கொழுக்கொ ழுப்பாம்—மழுவென்ப தறிக்குந் தண்ணம் வயங்கெரி யிரும்பு மாமே. 2. விழு தென்ப துப்பால் வீழ்தாம். 3. மழையென்ப குளிர்ச்சி மேகம்; வழக்கர்நீள் வழிவ ழக்கம். 4. விழுக்கேநீர்க் கூவல் கீழ்மை. 5. பொழில்புவி பெருமை சோலை போற் றுறு மத்த நாட்பேர். 6. நுழிலொரு வல்லி யின்பேர் நுவலருங் கொடிக்கொற் றனும். 7. வாழியே வாழ்த்தி சைச்சொல்; வழித்தோன்றல் சிறுவி மைந்தன். 8. பிழியெனு நாமந் தானே பிழிதலுங் கள்ளு மாமே.

ழகரவெதுகை முற்றும்.

---

(பி-ம்.) [1]சொற்பேர். [2]இன்புறு நூலோர் சொற்ற வெழிறிகழ் ழகாரத் தற்ற—நன்குய வெதுகைச் செய்யு ளவிற்றமொன் றொழியெண் ணுன்காய்த்—தென்புறு கவியிற் சொற்றான் செய்யவேற் குமரன் பொற்றாள்—அன்புற வணங் குஞ் செந்தி லருமருந் தையன் றானே.

# ளகரவெதுகை.

591 [1]மாங்குயிற் கிளவித் தீஞ்சொற் பிறைநுதற் கருங்கண் வம்பார்
கோங்கிள முலைப்பொன் தெய்வ குஞ்சரி வள்ளி கொண்கன்
காங்கயன் அன்பர்க் காத்த கடவுள்பொற் பாதம் போற்றி
ஓங்கியற் பெறுள கார வெதுகையின் றொடையோ துற்றும். (க)

592 அளையேவெண் டயிர்வன் மீக மகன்மலை முழைவ ளைப்பேர்;
தளையேயாண் மயிர்வி லங்கு [2]தண்பணை சிலம்பே நாற்பேர்;
[3]கிளையேயோர் பண்மூங் கிற்பேர் கேளொடு கிளைத்தற் கும்பேர்;
[4]வளையேகை வளைசங் காழி; வள்ளமோ ரளவை வட்டில். (உ)

593 விளைநரம் புடனுண் டாதல்; விளையுளே கழனி [5]யுள்ளம்;
[6]உளைபுர வியின்மேற் கட்டு மயிர்பிற மயிரு மோதும்;
களைகளை களைத லின்பேர்; களேபர முடல்பி ணப்பேர்;
[7]துளை துளல் துளைத லின்பேர்; துளங்கல்கம் பித்தல் மின்னல்.()

594 அளமேயொண் செறிவே கூர்மை யகட்டுப்பு [8]விளைநி லப்பேர்;
வளமேபல் பண்டஞ் செவ்வி வளப்பாடே புதுமை தட்டி;
விளமேயோ ரசைச்சொல்வெள்ளில்; வேளாண்மைமெய்ம்மையீகை;
நளமேதா னுகல்ம டங்கல்; ஞாளிதேன் சுணங்க னும்பேர். (ச)

595 அளவென்ப தினமே யெல்லை; யாளியே பூட்கை சிங்கம்;
களவென்ப களாவி னுமங் கருதுபட் டிமையி ரண்டாம்;
விளவென்ப வகிலி னோடே விளாவுதல் [9]விளாவே முப்பேர்;
உளவென்ப தியாழின் றண்ட முளுவுகோ லுளவு மாமே. (ரு)

---

(பி-ம்.) [1]மாங்குயிற் கிளவித் தீஞ்சொல் வல்லிதண் மருங்குற் செவ்வாய்ப்—பூங்கொடி யுமைப யந்த புங்கவ னன்பர்க் காத்த—காங்கயன் விரைசெய் செம்பொற் கமலமென் பாதம் போற்றி—யோங்கெழிற் றிகழ்ள கார வெதுகையின் றொடையோ துற்றும். [2]தடிசிலம்பு யாப்பு மூப்பாம். [3]கிளையேமெல் லிசைகி ளைத்தல் கேளொடு கிளத்தல் வேயாம். [4]வளையசஞ் சங்கே புற்றும். [5]புள்ளம். [6]உளையென்ப நயவு ளைத்தல் ஒண்பரி மயிர் மற் றும்பேர். [7]துளையென்ப துளைதல் தாம்பே சொற்றவேய் துளையே நாற்பேர் [8]விளைவே முப்பேர். [9]வெள்ளில்.

596 விளரென்ப [1]திளமை வெள்ளில் வேஞ்சினங் கொழுப்பே வெண்மை;
உளர்தலே சிதற லாகும் தடவலு முரைக்கற் பாற்றே;
களர்களர் நிலங்க ழுத்துக் கருமையே கொடியே நாற்பேர்;
அளர்நா கஞ்சேற் றின்பேர்; அளாவலே துழாவ லோங்கல். (சு)

597 அளகமே பன்றி முள்ளோ டலர்மழை மடவா ரோதி;
குளகமோர் செய்யு ளின்பேர் மாக்காலென் றிசைவுங் கூறும்;
புளகமே புளகித் திட்டல் புற்புதந் திகழ்கண் ணாடி;
களபமே யானைக் கன்று கமழ்சாந்துங் கலவைக் கும்பேர். (எ)

598 முளரிதீ விறகு நுட்ப முண்மரங் கமலங் காடாம்;
விளரியே யிளமை வேட்கை மிகுதியாழ் நரம்போ ரோசை;
களரியே [2]மிடறு கோட்டி களர்நிலங் கருமை நாற்பேர்;
வளரியல் பண்பெ ழிற்பேர்; வளைந்தென்ப வளைத்தல் பேசல். ()

599 புளிஞரே கொலைஞர் வேடர்; புள்ளியே கெவுளி ஞண்டாம்;
வெளிலணில் [3]வேழத் தம்பம் வெண்டயிர் கடைத றிப்பேர்;
பளிதமென் பதுகற் பூரம் பல்லமெண் கணக்கும் பன்னும்;
ஒளியிரு சுடரோ தீயே யொளிப்பி டம் புகழே நாற்பேர். (கூ)

600 அளியயேதே னளித்தல்வண்டே யன்புடன் வீர மைம்பேர்;
[4]வெளியேயா காயத் தின்பேர் மிளிர்மயிர்ச் சடையும் பேசும்;
[5]களியேகள் ளுடன்ம யக்கங் களிப்புட னிளமை நாற்பேர்;
நளியேசீ தம்நெ ருங்கல் நவிற்றிடும் பெருமை முப்பேர். (கo)

601 [6]துளியெனும் பேரே பெண்ணு மைமழைத் துளிய டைத்தல்;
[7]உளியிடங் கணிச்சி யின்பேர்; உள்ளமே முயற்சி நெஞ்சாம்;
இளியிசை யிசித்த லொன்றை யிணுங்குதல் சிரித்தற் கும்பேர்;
நளினியே வாவி யம்போ ருகத்தணங் கயனே நாட்டும். (கக)

602 அள்ளலே நிரயஞ் சேறோ டள்ளுத லெனவே முப்பேர்;
விள்ளலே விருபம் விள்ளல்; வெள்ளில்சா ணைவி ளாப்பேர்;
துள்ளலே மசக மாடு சொற்கூத்தோர் செய்யு ளோசை;
பொள்ளென லொலியி னோடும் விரைவினிற் குறிப்பும் போற்றும். ()

---

(பி-ம்) [1]திண்மை. [2]மிடரி. [3]வேள்வித் தம்பம். [4]வெளியென்ப விண்வெளிப்பேர். [5]களியென்ப வடிவங் கள்மால் களிப்பிள மைகு மும்பாம். [6]துளியே பெண் ணுமை மாரித் துளியுடன் படைத்த லும்பேர். [7]உளியேபூ விடங்க ணிச்சி.

603 வாளியா சுகஞ்சுற் றேட்டம் [1]வடிக்கணை சோணை நேமி ;
கோளிபூ வாது காய்க்கு மரங்கொள்வோன் [2]கொழுஞ்சி யென்றும் ;
பாளித மன்னங் கண்ட சருக்கரை குழம்பே பட்டாம் ;
ஒளியா னைக்கூ டப்பே ரொழுங்கென் றும் வழங்க லாமே. (கங)

604 வாளமே வட்ட மீர்வாள் மருந்திலோன் றெனவே முப்பேர் ;
கோளகை வட்ட நாமங் கிம்புரிப் பூணுங் கூறும் ;
சூளிகை மணிமா டம்பா னைச்செவி யடியுஞ் சொல்லும் ;
தாளியே யனுட நாளோர் வல்லிதிண் பனையுஞ் சாற்றும். (கச)

605 தளிம்மே யழகு மெத்தை ; [3]தளிர்த்தலே துளித்த லொன்றல் ;
வளைம்மாட் சிமைகொ ழுப்பே வழங்கிய கிரீடையே முப்பேர் ;
இளமைமா ழாத்தல் தன்மை மழவென வியம்ப லாகும் ;
குளவிவேட் டுவன்பச் சைப்பேர் ; கொள்ளலே நினைதல் கோடல்.

606 அள்ளேகூர் வலிபெ றப்பற் றிரும்புடன் செறிவே காதாம் ;
வள்ளேவார் காது கூர்மை வலிவளஞ் செறிவே வாட்பேர் ;
[4]கள்ளேபொய் சோரங் கேண்மை கள்வானோர் மருத வேலி ;
பள்ளேயோர் பாட்டுச் சாதி ; பள்ளமே ஞெள்ளல் சோரம். (கசு)

607 திளைத்தலே நிறைதல் கூடி மனுபவந் துளைத்தல் [5]செற்றும் ;
இளைத்தலே யிளைப்பி னோம மிரங்கலென் றேதற் பாற்றும் ;
கிளைத்தலே [6]நிறைதல் மல்கல் ; கிள்ளையே கிளிவா சிப்பேர் ;
வளைத்தலே கொளல்வ ளாகம்; வளாகங்கோ ணிடந்தொ டற்பேர்.()

608 கொள்ளையே யொளிர்ம ழைக்கோள் றுவன்றநா கரவண் டின்பேர் ;
வெள்ளையே வெண்சங் கிராமன் விளர்மேடம் வெண்பா வெள்ளி ;
பிள்ளையே காரிப் புள்ளே வயிரவன் பெறுஞ்சேய் முப்பேர் ;
வள்ளையோர் பாட்டே வள்ளை ; [7]வள்ளியம் வயிர்ம ரீசி. (கஅ)

609 கள்வனே முசுநண் டியானை கருநிறத் தவனே சோரன் ;
ஞொள்கல்சோம் பிளைத்த லச்சக் [8]குறிப்பலே யல்று வற்பேர் ;
கொள்கையேயறிவே பண்பாம் ; கொளுத்தேழுட் டொடுபு ணர்த்தல்;
தெள்ளுதல் கொழித்த லோர்தல் ; தேளனு டந்தெ றுக்கால். (ககூ)

---

(பி-ம்.) [1]வளிசோனை மாரி நேமி. [2]கொழுஞ்சி யாலாம். [3]தடுக்குமென் றறையற் பாலாம். [4]கள்ளென்ப பொய்சோ ரங்கள் களவானோர் மருத வேலி. [5]சோறும். [6]மிகுதி. [7]வள்ளிய மினமே யூது குழல்மரக் கலமும் வைக்குர். [8]குறிப்பென றவலற் பாலாம்.

610 வள்ளியே புனையி ழைப்பேர் வல்லிகை [1]வளைவோர் கூத்தாம் ;
பள்ளியே சிற்றூர் கோட்டம் பாயல்கண் படைநீத் தோரூர் ;
நள்ளியோர் வள்ளல் சுற்றம் ஞண்டொரு கொடியே நாற்பேர் ;
ஒள்ளியே செம்பொன் சுக்ர னௌள்ளிதென் றோதற் கும்பேர். (உ0)

611 [2]புள்ளுவம் கனியே வஞ்சம் ; புள்ளவிட் டம்புள் வண்டாம் ;
வெள்ளமே யுவரி யோரெண் மிகுதியென் றோதன் முப்பேர் ;
நள்ளெனல் நடுவே நட்பாம் ; [3]நாளிகஞ் சகோரம் வள்ளை ;
மள்ளரே குறவர் வீரர் மருவிலா வுழவர்க் கும்பேர். (உக)

612 வாளொளி கயிறு கச்சு வயங்கிய படைநீர் கூர்மை ;
கேள்கிளை கிளத்த லொன்றைக் கேட்டுறல் கல்வி [4]நாற்பேர் ;
நாள்மல ருடுவே காலை நவிற்றொரு நாள்செவ் விப்பேர் ;
நீள்நெடுந் தூரத் தின்பேர் நெள்ளனு மென்ன லாமே. (உஉ)

613 அளக்கர்கார்த் திகைநாள் சேறோ டளங்கடல் புடவி யைம்பேர் ;
விளக்கமே வெள்ளை தீபம் ; விளிவுவெஞ் சினமே சாவாம் ;
துளக்கமே பயம் நடுக்கம் ; சுள்ளியே யனிச்ச மாச்சா ;
இளக்கமே [5]யிளக லின்பே ரீரமு மியம்ப லாமே. (உ௩)

614 அளித்தலே செறித்த லீகை ; ஆளாள்த லாட வற்காம் ;
களித்தலே மந்த மைத்தல் ; [6]களகரே புலையர் வேடர் ;
[7]தளிர்த்தலே துளிர்த்த லொன்றல்; தாளாண்மை [8]நடத்த லூக்கம்;
சுளித்தலே [9]யொசித்த லின்பேர் சொற்றவெஞ் சினமு மாமே. ()

615 வெளிறலே யறிவி லாமை விளர்த்தலும் விளம்பற் பாலாம் ;
[10]ஒளிறலே நிலவல் சீர்த்தி ; ஒளிவட்டந் திகிரி யாடி ;
பிளிறலே [11]களிற்றி னோசை கீண்டலென் றோதல் பேசும் ;
குளிறல்பே ரொலிபெ ழுந்தி னொலியெனக் கூறற் பேரே. (உ௫)

616 வேளையோர் புதர்முக் காலம் ; வெள்ளியே வெண்மை தாரம் ;
[12]பூளையே யிலவின் பஞ்சும் புகலுமோர் பூடும் போற்றும் ;

---

(பி-ம்.) [1]வளையோர். [2]புள்ளுவ னனியே வேடன் பொருந்தவஞ் சனையே யென்ப. [3]நாளகஞ் சகோரம். [4]கேண்மை. [5]யிரங்க லீரம். [6]களக்கரே. [7]தளித்தலே. [8]யூக்கஞ் சேறல். [9]யொசித்தல் சிதம். [10]ஒளிர்தலே. [11]யெழுத்தி னோசை. [12]பூளையே யிலவோர் பூடு.

சூளையே கணிகை சூளை ; சுளகேமுற் றில்வி சாகம் ;
நாளமுட் டுளையி னுமங் கமல[1]நா ளத்தும் நாட்டும். (௨௬)

617 ஞெள்ளலே பள்ள மென்மை நீள்வீதி மிகுதி பூசல்
ஒள்ளிய சோர்வி னோடே யுடன்பட லொலியே யெண்பேர் ;
எள்ளலே யிகழ்ச்சி யெண்ண லிலங்கிய நகையே மூப்பேர் ;
உள்ளலே நினைவே யுள்ளான் ; உளைவுளைத் தல்லி ரக்கம். (௨௭)

618 குளிர்பனி மழுவே ஞண்டே குடமுழாக் கவண்கு ளிர்ச்சி
யொளிரிலை மூக்கிர் வாள்மீ னெழுங்குட னிருத்த லெண்பேர் ;
நளிர்குளிர் வெறுப்பே மல்கல் ஞண்டிடன் பெருமை யைம்பேர் ;
களிறுநீள் சுறவு பன்றி கறையடி யத்த நாட்பேர். (௨௮)

619 மீளியே யிளமை வீரன் மேன்மகன் பெருமை பாலை
யாளிறை யிரங்கல் கூற்றே டாற்றலென் றிசைத்த லேழ்பேர் ;
கூளியே யிளமை மண்ணை குறளையே றிபமே சுற்றம்
நீளிய தொகுதி குற்றம் நிகழ்த்துபே ரிருநான் காமே. (௨௯)

620 களமேபோர்க் களங் கழுத்து களாவிடங் கறுப்பில் லாள்நெல்
லளவில விடம்ப ரப்பென் றறையும்பே ரிருநான் கேயாம் ;
குளமேபூ ராடம் வெல்லங் குட்டமுத் திராடம் நெற்றி ;
தளமேபூ விதழே தாழி [2]சாந்துடன் பொருப டைப்பேர். (௩௦)

621 இளையேமைப் புயல்திண் பூமி யிளமையங் காடி வேலி
களையெயில் பசுக்கி டங்கு காவற்கா டோரெண் பேராம் ;
கொளையேபாட் டோரி சைப்பேர் ; கொள்ளமாற் றுடன்சே ருகும்;
[3]மூளையேயங் குரமே பிள்ளை ; [4]முள்ளேநுட் பம்வார் சூலம். (௩௧)

622 காளமே யூதுங் கொம்பு கருமைமூ விலைவேல் நஞ்சங்
[5]கோளில்பூ வுடனே யெட்டி மரமெனக் கூறு றேபேர் ;
தாளரி குறுந்தாள் பாதஞ் சாற்றுமுத் தியோக முப்பேர் ;
பீளிளங் கதிர்க ருப்பம் பேசுறு மிளமை யாமே. (௩௨)

(பி-ம்.) [1]வல்லிக்கு. [2]சாந்துமுப் பரிசை தானை. [3]முளையேசே யங்கு ரப்பேர் மூங்கிலுந் தறியு மாமே. [4]முள்ளென்ப நுட்பஞ் சூல முண்டக மெனவும் பாற்றே. [5]நீளமே நிகழ்பூ வெட்டி மரங்கழு நிகழ்த்தே ழேபேர்.

623 கோள்[1]குலே யிடையூ றென்பான் கோள்வலி குணம்பொய் தீங்கே
நாளொடு கோடல் கொட்டாட் டெனநகில் நாமம் பத்தாம்;
தோள்புயஞ் செங்கை நாமம்; துளும்பலே திமிறல் துள்ளல்;
வேள்மத வேள்கு லாலன் வெறிபாட்டாளன்செவ் வேளாம். (௬௩)

624 விறலுயர்ந் திடும்ள கார வெதுகையின் விரிக்குஞ் செய்யுட்
குறைவிலெண் ணன்க தென்ன வுலகினிற் கூறச் செய்தான்
மறைநஞன் கேத்துஞ் செவ்வேள் மலரடி சென்னி சூட்டும்
அறவர்வாழ் செந்தின் மேவு மருமருந் தையன் றனே. (௬௪)

[மீகை.] 1. உளதென்ப துடைத்தே கேண்மை; உள்ளானோர் விலானோர் வீயாம். 2. குளியமே புலியுண் டைப்பேர். 3. ஈளையே பிசையோர் நோயாம். 4. இளம்பிடி வடவை பெண்ணும். 5. புளித்தலே சுவைசொறித்தல். 6 காளையே றிளைபா லைக்கோன்; காளிந்த மாவ மேலம். 7. கேளிதெங் கரிவை யாடல்; கேளனே கிளேயோன் சேரன். 8. துளவுதண் டுழாய்வருத்தம்; துழாய்பூதி தோம ரப்பேர். 9. வள்ளுவே புலாலி ஞமம் வாளுறை யெனவும் பேசும். 10. அளவரே யுப்ப ளத்தோ ரளப்பவ ரெனவும் பாற்றே. 11. வாளா கேளாப் பேச்சின்மை. 12. பிளவையே நோய்பி ளப்பு.

ளகரவேதுகை முற்றும்.

---

# றகரவெதுகை.

625 [2]குரங்கிமென் குழவி பூக்த கொழுஞ்சடை வள்ள றந்த
பரம்பரன் றிணிதோட் கந்தன் பனிமலர்க் கடவு ளன்கு
சிரந்துளங் கிடப்பு டைத்த சேவகன் றாளேப் போற்றி
யுரங்கிளர்ந் திடும்ற கார வெதுகையாப் பினையு ரைப்பாம். (௧)

626 நறவமே யனிச்சந் தேறல் ஞாழல்சுங் குமந்த ளிர்ப்பேர்;
புறவமோ ரூர்புட் காடே முல்லைபி னிலனும் போற்றும்;
துறவுயோ கங்கூட் டப்பேர்; துற்கையே பூரஞ் சூலி;
பிறவெனு நாமங் [3]கட்டும் பெட்டியும் வசிபு மாமே. (௨)

---

(பி-ம்.) [1]கொலே. [2]நிலங்கிளர் வலிசி றந்த நீணிறச் சூரன் றிண்டோட்—குலங்கிளர் வரையை வாட்டுக் கொழுஞ்சுடர்க் கதிர்வேற் கந்தன்—நலங்கிளர் கமலப் பாத நாவினு னவிற்றி யேத்தித்—துலங்கிய றகாரத் துற்ற வெதுகையின் றொடையைச் சொல்வாம். [3]. காட்டும்,

627 அறவரே யுரியோர் யோகர்; ஆற்பத நீழல் தேனீ;
குறவரே வேடர் குன்றோர்; குறிகோசங் குறிப்பி லக்காம்;
மறவரே வயவர் வீரர் குறவர்க்கும் வழுத்தற் பாற்றே;
பறவைபோழ் திறகே பக்கி; பாறலே றுடனே யோட்டம். (௩)

628 உறவியே யூற்றெ றும்போ டுயிருலைக் களங்கி லேப்பேர்;
பிறவினை யதுவே காமம் பாவமும் பேசற் பாற்றே;
உறழ்விடை யீடே காலம் உவமானம் பகைபு ணர்ப்பாம்;
இறவைபுட் டிற்பே ரேணி; எறிதலே செகுத்தல் வீசல். (௪)

629 குறளியே பெட்டாண் டிற்பெண் குறள்பூதம் வாம னப்பேர்;
பிறழ்வவிர் தற்பே ரோடே பெயர்தலென் றிருபேர் பேசும்;
குறடுதிண் பலகை திண்ணை கொல்பற் றுங் கருவி யொன்றும்;
கறடுசெம் பொன்பேர் தாளிற் காட்டுறு பரடு மாமே. (௫)

630 விறல்வலி பெருமை கொற்றம்; வெறுப்புவேண் டாமை கோபம்;
[1]அறலரி மணல்வி ழாவே யான்றநீர்த் திரையே நீராம்;
இறலொரு மீனிற் றற்பேர்; [2]இறுலரற் றேன்கூ டென்ப;
மறல்பகை சமர்பி ணக்கு; மறலிசா தல்கூற் றப்பேர். (௬)

631 இறும்பூதே யதிச யங்கூ றெழில்மலை தகைமை காடாம்;
[3]மறங்கொலை தோலா வீரம் வன்பிணக் கொடுசி னப்பேர்;
அறந்தரு வறமே யில்லா றறமேகை யறமே முப்பேர்;
முறம்புகல் விசாக முற்றில்; முறுவலே சிரித்தல் பல்லாம். (எ)

632 [4]ஆறேசெல் மார்க்கம் ஒண மறைந்திடு நதியே முப்பேர்;
சாறேகள் ளொடும ரத்தின் றூழ்குலை விழவுஞ் செப்பும்;
சேறேதித் திப்புக் கும்பி [5]திகழ்சாரங் கள்ளே நாற்பேர்;
ஏறேசெல் வம்மாற் சாலம் [6]எருதுடன் முதலு ளாமே. (அ)

633 ஊறேதீ மைப்பேர் தீண்ட லூறுகொலை யிடையூ றென்ப;
பாறேநா வாய்நி மித்தம் பருந்துபாற் றிலதங் காற்றும்;

(பி-ம்.) [1]அறலேநீர் நீர்த்தி ரைப்பே ரரிமணல் பரிவு மாகும். [2]இறலு மாகு மென்ப. [3]மறஞ்சினம் பிணக்குக் கூற்று வன்கொலை கொலாமை வீரம். [4]ஆறென்ப செல்வ மோண மதர்நதி யறையோ ரெண்ணும். [5]திருவிழாக் கள்ளே சாரம். [6]எருதிடி முதலு ளாம்பேர்.

நாறேநெல் நாற்றே நாறல்; [1]நாற்றமே நாறல் தோன்றல்;
தாறேவிற் குதையே மட்டே தாழ்மரக் குலைமுட் கோற்பேர். (௯)

634 குறைநவை நிரப்புக் கொள்ளை குடியிறை குறைத லும்பேர்;
பொறைமலை துறுகற் பூமி பொறைபாரஞ் சுமைக ருப்பம்;
கறையுர விறைபி றுத்தல் கறுப்புட னிரத்தங் குற்றம்;
மறைமறை கேட கப்பேர் வழங்கிரா சியமு மாமே. (௧௦)

635 அறைதிரை முறைஞ்சே யோத லடித்தல்சிற் றில்ப றைப்பேர்;
நிறைதுலாம் நீர்ச்சால் பாசி நிலைமையே யறிவே யைம்பேர்;
சிறையாண் பக்கம் புள்ளின் சிறகுவே றிடமே நாற்பேர்;
முறைகுணங் கோச மேயூழ் முறைமையென் றோதற் பேரே. (௧௧)

636 எற்றலே குத்தல் வெட்ட லெய்துயிர்க் கொலைசெய் தற்பேர்;
குற்றலே குறல்ப றித்தல் நெரித்தலுங் கூறற் பேரே;
ஒற்றலே யுடுத்தல் மொத்தல் குறிக்கொள ளுணர்தல் நீங்கல்;
[2]முற்றலே வளைதல் நாம மூப்புக்காழ்க் கோட லும்பேர். (௧௨)

637 ஒற்றேமெய் யெழுத்தொற் றின்பேர்; [3]ஒற்றுத லறித லொற்றல்;
பற்றேயன் பொடுபற் றற்பேர்; பற்றளே தொழில்வி னைப்பேர்;
செற்றேபொன் னலர்வெற் றிப்பேர் [4]செறிவெனு மூப்பேர் செப்பும்;
விற்றேவிற் பத்தி விள்ளல்; [5]வெறுப்பென்ப நெருங்கல் சொம்பாம்.

638 நெற்றியே படைவ குப்பும் நிகழ்நுதற் பேரும் வைக்கும்;
கொற்றியே துர்க்கை வேந்தன் கோவிளங் கன்றுங் கூறும்;
பெற்றியே யடுக்கு தற்பேர் பிறழுகற் குணமி ரண்டாம்;
முற்றிலே விசாக நாட்பேர் முறமெனுங் கருவியாமே. (௧௪)

639 அற்றென்ப பிறித சைச்சொ லருவினை யாற்றன் முப்பேர்;
புற்றென்ப தெழுத்துச் சென்னி வன்மீகப் பேரும் போற்றும்;
எற்றென்ப திரக்க [6]மொத்த லெறிதலெத் தன்மைத் தென்றல்;
மற்றென்ப வினைமாற் றோடே யசைநிலைப் பேரும் வைக்கும். (௧௫)

---

(பி-ம்.) [1]நாறல்தோன் றதலே நாற்றம். [2]முற்றல்காழ்க் கோடல் மூப்பு முடி வுரும் போதல் கோபம். [3]ஒத்தத. [4]செறிவுடன் கெடுத ஞற்பேர். [5]வெறுப் பேவெண் டாமை கோபம். [6]மொற்ற.

640 உறையுளூர்ப் பொதுவே நாடே யுயர்மனை சயனம் நாற்பேர்;
நறையெனு நாமந் தேறல் நறுநாற்ற [1]மூண்கள் ளேயாம்;
[2]பறைமுழைஞ் சுடனே மேளம் பகர்தல்புட் சிறகே [3]நாற்பேர்;
நிறைதலே கமமுண் ணற்பேர்; நிறமென்ப மருமங் காந்தி. (கசு)

641 உறுகணோய் பயத்தி னுமை மிடிதுன்ப மோது நாற்பேர்;
குறுகலே யுறல்பற் றிட்டல்; கூறலே விற்றல் பேசல்;
துறுகலே கருப்பம் பாரஞ் சுருமைகற் பாறை நாற்பேர்;
[4]மறுகுணை மறுகே வீதி; மறலியே மயக்கங் கூற்றும். (கஎ)

642 வறுமையே மிடிமை தாக்கம் வழுத்துறும் நுண்மை முப்பேர்;
குறுமையே யற்பம் பாவங் [5]குறுகலென் றோதற் கும்பேர்;
சிறுமையே மிடிநோய் நுட்பம்; தேற்றமுட் [6]குறிப்பே ஞானம்;
உறுவனே முனிசி னன்பேர்; ஒற்கலே [7]யின்மை தேய்தல். (கஅ)

643 அறுவாய்கார்த் திகை[8]நா டிங்கள்; [9]அறுகேபுல் யாளி சிங்கம்;
இறவேதா னிறவி றக்கம்; ஏற்றமே மிகுதி வெற்றி;
தொறுவேயான் குழவி நாமம் சொல் [10]விட்டி லடிமை முப்பேர்;
செறுவேகோ பம்வ யற்பேர்; சிறுவரை யிலேசம் பொற்றை. (கசு)

644 ஈறேயுப் பளங்க டைப்பேர்; இறுதிபெய் கடையு யர்ச்சி;
நூறேயெண் ணெலிபொ டித்தல்; நொறில்வினு [11]ணுடக்க மும்பேர்;
சோறேவெண் மூரல் நாமம் பாணிநா ளினிமை சொல்லும்;
கூறேபங் கிடுதல் மாற்றம்; கொறியேமே டங்கொ றித்தல். (உ0)

645 அற்பமே சிறுமை நாயாம்; ஆற்றூற்றல் தலைக்க டைப்பேர்;
கற்பமே சுவர்க்கம் வெய்ய கமலனு ளதுவும் வைக்கும்;
சற்பமே விரைவு பாம்பு வரையாடு தானே முப்பேர்;
பொற்பெனும் பேர்வ னப்புப் பொலிவோடொப் பனையென் றுமே. ()

646 அற்புத மிரக்கச் சொல்லு மதிசயந் தானே செப்பும்;
விற்புவெற் றிப்பேர் வெம்போர் [12]வெருவல்செற் றுடன்பெருக்கம்;

(பி-ம்) [1]மூண்கள். [2]பறைநிரை முழைஞ்சே •பெற்றும் பறையோதல் புள்ளின் றூவி. [3]நாட்பேர். [4]மறுகுநீள் தெருமறுக்கம். [5]குறுகலு மழகு மாகும். [6]குறிப்பேர். [7]யிளமை. [8]நா மங்கள். [9]அறுகுபுல் யாளி சிங்கம் ஆனையே புலியெனும்பேர். [10]வீட்டி னடிமை. [11]•நடக்க மும்பேர். [12]வெருவலே பெருக்க மல்கல்.

கற்பருள் ளுயர்த்த மேடை கடிமதி ளுடன்கற் பாகும்;
அற்பசி முதனு டிங்கள்; ஆற்பேபே ரொலிசி ரித்தல். (உஉ)

647 உற்கைவிண் வீழுங் கொள்ளி யுடுவெனு மிரண்டே நாமம்;
சற்கரை கரும்பின் கட்டி சாற்றிடு நெருக்க மும்பேர்;
பொற்கணி யியக்கர் கோமான் பூடொன்றோ டாந்தைக் கும்பேர்;
பிற்கெனு நாமந் தானே மழையுடன் பின்னு மாமே. (உங)

648 [1]ஆற்பா வந்து ளிப்பேர் ஆகவந் தூளிக் கும்பேர்;
மாற்கமே சமையம் வீதி மறுதலை [2]வழிச மூலம்;
வேற்கான் வெற்றியாட் டாளன் மிளிர்ிலை வேற்பி ராகும்;
காற்பாச மிழைப ருத்தி; கறிமிள குடன்க டித்தல். (உச)

649 [3]வறுகலங் கானல் யாழாம்; மறுமறுத் தல்குற் றப்பேர்;
அறுபத மூறும் வண்டோ டறைகையாந் தகரைக் கும்பேர்;
தறுகணுள் ளடங்கி லாமை மறஞ்செயிர்த் தற்பேர் சாற்றும்;
சிறுமூலம் பூண்டு காமன் றிப்பிலி முப்பே ராமே. (உரு)

650 உறுப்பேபா லைத்தி றப்பண் ணுடனங்க மிகுதி வையம்;
இறப்பேசா மிகுதி போக்காம்; [4]எறுழ்வலி யுடன்றண் டப்பேர்;
பிறப்பேபேர் தல்வெற் றிப்பேர் பிறந்திடல் செறிவே நாற்பேர்;
இறுத்தல்பேச் சொடித்தல்சோம்போ டிறைபிறுத் திடலே தங்கல்.

651 அற்கமே நீர்க்காக் கைப்பே ரலர்பொது ளெருக்கும் பேசும்;
வற்கமே குதிரை வாயின் வடமூங்கில் வழுவில் கூட்டம்;
சிற்பியே யுவச்சர் ஓவர்; [5]திறன்றிறங் கார ணப்பேர்;
துற்றலே நெருங்கல் துய்த்தல்; சூறையே நுதல்சு ழற்கால். (உஎ)

652 பறழ்தலம் சாதி கன்று; பஃறூரன் புடையோர் தெவ்வர்;
புறமிட முதுகு வீரம்; பொற்றைகான் சிறுகுன் றேயாம்;
பிறழ்தலே நடுக்கம் வேறு பெயர்தலோ டொளிவி டற்பேர்;
புறணியே குறிஞ்சி முல்லை நிலனொடு புறப்பே தோலாம். (உஅ)

653 வெறுக்கைபொன் [6]கனவேசெல்வம்; மேற்கோளோசனியன் பூட்கை;
தூறுக்குடம் பீறுதல் நாமந் தோலுடன் பிணக்குஞ் செல்லும்;

(பி-ம்) [1]ஆற்பா வந்தூ ளிப்பே ராகவந் தூளியொ லித்தல். [2]வழுச. [3]வறு சலங். [4]எறுழ்கதை வலியே நூணம். [5]சித்திரக் காரர்க் கும்பேர். [6]கனலே செல்வம் விழுப்பொரு ளெனவே முப்பேர்.

குறிக்கோளொற் றுமைமயே தேற்றங் கணித்தற்குங் கூறற் பாற்றும்;
அறிக்கையே பற்றி வைத்த லறிவுமென் றறைய லாமே. (உசு)

654 முறியென்ப முறியல் தீட்டு முறியோலை தளிரே முப்பேர் ;
வறிதென்ப தருக வின்பேர் சிறுத்தலு மதன்பொ ருட்டாம் ;
கிறியென்ப வழிபொய் புன்மை ; கிறவுஞ்சம் வரைநீ வோர்புள் ;
நெறியென்ப நடவை மோக்கம்; நிற்வாணங் கெதியோர் தீக்கை. ()

655 ஆற்காமை நிலையா மைப்பே ரறிவின்மை யதற்குங் கூறும் ;
விற்கோடி யிராமன் றந்த மிளிர்தீர்த்த மோர்க ணிப்பாம் ;
தற்கோலங் கமழ டைக்காய் சாற்றொரு [1]மருந்துங் காட்டும் ;
வற்காலி யுயரும் பெற்றம் வருடைக்கும் வருத்த தாமே. (ருக)

656 பிறங்கலே மிகுதி வெற்புப் பெருமையே நிவப்பே துக்கம்
நிறங்கிளர் பிறையி னோடே யிறைநிறை வுடனெண் பேராம் ;
கறங்கல்பேய் சுழற்சி [2]யார்ப்பாம் ; கறுத்தலே கருமை கோபம் ;
பிறங்கடை வழியி னுமம் பிள்ளையு மசலு மாமே. (ருஉ)

657 [3]இறும்பேசெம் மலர்கு றுங்கா டெழிற்கிரி யிசைக்கும் வண்டு
நறுங்குழை காந்தட் செய்பூ நற்செழுந் தகைமை யேழ்பேர் ;
புறம்பணை குறிஞ்சி முல்லை நிலனிரு பேரும் போற்றும் ;
குறும்பொறை குன்றே காடே குறிஞ்சிநன் னிலத்தூர் முப்பேர்.

658 இறையேவீட் டிறப்பு வேந்த னிறையிறுத் திடல்வி தாதாப்
பிறைவேணி சிறகு தங்கல் பெரியோர்கை வரையே சென்னி
நிறைகால [4]வரவே யற்பம் நிகழ்கடன் பன்மூன் றேபேர் ;
துறையேசீர்த் துறைபு மாயத் துறைசெய்யுட் டுறைபு மாமே. ()

659 அற்றமே சற்றே நாயே யவகாச மறைவு சோர்வோ
[5]டிற்றிலா துடியே யற்ற லியம்புறு முண்மை யேழ்பேர் ;
செற்றமே பகைமை கோபம் ; சிறப்பெனப மிகுதி சீர்மை ;
பெற்றமே பசுவி னுமங் கொழுவிடை யதற்கும் பேரே. (ருரு)

(பி-ம்.) [1]மருந்தே யாற்றல். [2]யார்ப்புக் கடாவொரு குறுந்த டிப்பேர். [3]இறும்புதா றதிச யங்குன் றிண்டைப்பூத் தகைமை காடாம். [4]வரைவே. [5]இற்றலே துடியே யுண்மை யெனுமபி தான மெட்டாம்.

660 தோற்றமே செனன மூற்றஞ் சொன்மாலை முளைத்தல் சீர்த்தி
யேற்றமார் விளக்கங் காணல் மிருதியென் றிசைக்கு மெண்பேர்;
ஊற்றமே யறிவொ டாற்றல் [1]சலிப்பின்றி நிற்ற லோதும்;
கூற்றுரை யியமன் பேராம்; கொற்றமன் னியல்வெற் றிப்பேர். ()

661 ஊற்றேகோ லுறவி தீமை யுற்றறி புலனூற் றுக்கோல்
மாற்றிலா விடையூ றென்ன வழுத்திய நாம மாறும்;
தோற்றலே புறந்த ரற்பேர் சொற்புகழ் வலியே தோற்றம்;
போற்றலே வணங்க லோம்பல்; புற்பதி தருப்பை பெண்ணை. ()

662 [2]குறும்புபா லைநி லப்பேர் குறுநில மன்னர் தம்மோ
டிறும்புபோர் புரித லூரென் றியம்பிய நாம மைந்தாம்;
பிறந்தையுற் பவமே பாவம்; பிற்பல மாசு திப்பிலி;
பிறங்குடற் றழும்பி ஞமம் பெருமையென் றிரண்டி மாமே. (௩அ)

663 வெறியேகாற் றங்க லக்கம் வெறியாடல் வட்டம் வெம்பே
யறிமேடம் வெருவல் மூங்கி லணங்காடல் மறவி தீங்கள்
பொறியார்மென் சிறைவண் டென்னப் புகலுறு பேரீ ராறும்;
மறியேமான் மேடம் நிற்றல் வலிமுகம் யானை யைம்பேர். (௩௯)

664 ஆற்றலே வலிமு யற்சி யதிகமே நிலைமை ஞானம்
போற்றலார்ப் பரித்தல் செய்தல் பொறை[3]யார்த லீவையொன் பான்பேர்;
ஏற்றலே யெழுப்பல் கோடல் எதிர்ந்துபோர் செய்த லேற்றல்
போற்றிட [4]விழிவி னோடு மிகுதியும் புகலேழ் பேரே. (௪0)

665 பொறியென்ப வரியெ ழுத்துப் புள்ளியைம் புலன்றீ செய்யோள்
நெறிதுன்று மதிலு றுப்பு நீணிதி வினைவெ றுக்கை
பிறிசெங்கை வரைத ழும்போ டிலாஞ்சனம் பொறித்தல் பெய்நீ
ரறிகின்ற மலைப்பே நாவா யபிதான மீரெட் டாமே. (௪௧)

666 உறையேமைத் துளிவி லங்கூ றுறைத்தலோ ரிலக்க நீளம்
அறைவாளுள் படைபெய் கூடோ டட்டபாற் புரைநல் லாடைக்
கறைபகற் றுவர்நீர் தூய்வெண் கலம்பொருள் மருந்தி டைச்சொல்
முறையுட னெழுக லென்ன மொழியுமீ ரேழ்பே ராமே. (௪௨)

---

(பி-ம்.) [1]சலிவின்றி. [2]குறும்பேவெற் பொடுகான் பாலை குறிஞ்சிநன் னிலத்தார் வெம்போர்—திறங்காலுங் குறுகி லப்பார்த் திபரெனு மறுபே ராமே. [3]யார்த்தல். [4]விழியி னோடே.

667 [1]பொற்புயர்ந் திடும்ற கார வெதுகையிற் போற்றுஞ் செய்யுட்
[2]சொற்பெற வொன்றே டெநாற் பானெனத் துலங்கச் செய்தான்
வெற்புறழ் நெடுங்க லாபச் சிகி[3]யிவர் விசாகன் பொற்றாள்
அற்பகல் வணங்குஞ் செந்தி லருமருந் தையன் றானே. (சரு)

[மீகை.] 1. மேற்குமேற் றிசைமே லும்பர். 2. இறைஞ்சிவற் கலேவ் ணங்கல். 3. அறவை யாடை சித்திரை நாளுக்கு மறைய லாமே. 4. நறவே செங் தேனி னுமம் நாறுங்குங் குமமு மாமே. 5. நெற்கிடை மூல நாளே நிகழ்த் துற மீடும் மாமே. 6. ஆற்பேபோர் செய்தல் தூளி யாசமே யொலியே நாற்பேர். 7. சொற்கமே மூலேசு வற்கம்; தூறேதூற் றுதல்கா டென்றும்-பிற்கெனு நாமந் தானே விளம்பல்மெத் தெனவு மாமே. 8. கற்சூரங் கழல்பே ரீச்சாம். 9. பொறுத்தலே பொறுமை தாங்கல்; பொறையனே பொறப்போன் சேரன்-வெறித்தலே செறிவி னுமம் வெஞ்சினம் வெறித்தலாமே. 10. உறுரே யொன் னலரோர் வில்லார்; உறையலே பிணக்கி ருத்தல்-சிறுரேபுல் லறிஞர் காமஞ் சிறுவர்க்கும் புகலற் பாலாம்-சுறுவேவெங் களிறு மீனுஞ் சொற்றன மகர மும்பேர்-இருலேயா ராற்றேன் கூடே றெரிநாளென் றியம்ப லாமே. 11. கொற் றவை துற்கை வெற்றிக் கொற்றவர் தமக்குங் கூறும். 12. உறையூரே சோழ னூரு முயர்மரு தத்தா ரும்பேர். 13. காறேநீ ளங்கொ ழுப்பேர். 14. விறலிபா டிச்சி வீரன்; வீறலே விரிவு மீறல்-கறவையான் வடவி ருக்கங் கறக்கும்பால் வருடைக் கும்பேர். 15. குறுந்தடி போதி கைப்பேர் குணிலெனும்-பேரும் போற்றும்-குறிஞ்சிசெம் முள்ளி யோர்பண் மலேச்சார னிலமுங் கூறும். 16. நோற்பவை யைந்த வித்தல் பொறையென நுவலற் பாலாம்-பாற்புரை புள்ளின் குஞ்சே யிருபிறப் பாளர் பார்ப்பார்-ஆற்றரை றுதலின் பேரே போதச்செய் தற்பே ராமே. 17. செற்றல்செற் றுதல்கெ டற்பேர்-பறம்பெனு நாமம் வெற்பும் பயோதர மதுவு மாமே. 18. இறம்பூதே யதிச யம்வண் டிண் டைப்பூத் தகைமை காந்தள்-நறம்பூச்செம் பூக்கு றங்கா னற்குழை குன்றென் பான்பேர்,

றகரவேதுகை முற்றும்.

---

(பி-ம்.) [1]பொற்புவல் லினற. [2]சொற்பெற மாறெட் டென்ன வுலகி னிற் றெருப்பச் செய்தான். [3]யுலா.

# ளகரவெதுகை.

668 [1]வரைகிள ரவுண வாரி சுவறிட வடிவே ரெட்டுத்
திரைகிள ரொலியி னெற்றுந் தேவர்தஞ் சிறையை மீட்ட
நிரைகிள ரூறி ரண்டு தோளவ னிறத்தாள் போற்றி
உரைகிளர் ளகார மாய வெதுகைத்துக் கோத லுற்றும். (க)

669 நளவென்ப [2]கருத்து ணர்ச்சி நவிற்றிடுந் துணிவென் றேபேர்;
களவென்ப துயிலே மைபல்; களவிதீ யிரவி பன்றி;
மனவென்ப நினைத்த லாடை வயங்குநன் மணிசங் கக்காம்;
வினவென்ப விளம்பல் [3]கூறும் வினவெனு மிருபே ராமே. (உ)

670 முனிசினம் யானைக் கன்றோ டகத்தியில் முனிவ னைம்பேர்;
தனிதமி யொப்பின் மைப்பேர் [4]சார்கோவிற் றாறல் நாற்பேர்;
துனிசினம் புலவி நீட்டம் துன்பம்நோய் வாட்கோ ரைப்பேர்;
நனிமிகு திநெ ருக்கம் பெருமையிம் முப்பேர் நாட்டும். (ங)

671 வினையிரு வினையே கன்ம மிகுபூசல் குயிற்றல் நாற்பேர்;
முனைறுனி [5]படைப கைப்பே ரிறைமையும் வெறுப்பு மோதும்;
சினையரும் பேக ருப்பம் திகழுறுப் பொடுகொம் பாகும்;
வனைதலே யணிதல் பூசல் மன்றலொப் பனைநாற் பேரே. (ச)

672 பனியென்ப குளிர்ந டுக்கம் பனியச்ச மதிதுன் பப்பேர்;
நுனியென்ப நுதிநுண் மைப்பேர் நூற்றுறு பஞ்சு மாகும்;
[6]சனிமந்தன் மகநாள் பூரம்; தனஞ்செயன் கால்தீ பார்த்தன்;
புனிதந்தூஉப் புணர்த நாளாம்; புன்கணோப் மெலிவு துன்பம். ()

673 [7]நனைமலர் முகுளே வேள்வி; நான்முக னருகன் கஞ்சன்;
அனையுத வுறுதாய் தோழி; அனித்தஞ்[8]சந் ததம்பொய் சாந்தாய்;
கனையொலி செறிவி ரண்டாம்; கானென்ப மணங்கா டாகும்;
வினைஞரே கனைஞர் கூத்தர் விளம்புகம் மியரென் றுமே. (சு)

(பி-ம்.) [1]வல்லினை நிகர்த்த கொங்கை மடவாற் சசிம ணாளன்–இல்லி னர் தழைப்பச் செய்த வெம்பிரான் செந்தில் வேலோன்–நல்லின மணிப்பொற் றண்டைச் சிறடி நளினம் போற்றி–மெல்லினம் புகல்ன கார வெதுகையின் றொடைவி ரிப்பாம். [2]கள்ளே செப்பல் நற்றெறி வகல நாற்பேர். [3]கேட்டல் வினுவெனு முப்பே ராமே. [4]சாளரங் கோயிற் றாறல். [5]படைபண் கைப்பே. [6]சனியென்ப துக்கம் வாரஞ் சாற்றுறு மகநாள் பூரம். [7]நனையென்ப கள்ளே வேள்வி நவிற்றுபூ முகையு மாமே. [8]சத் தியம்பொய் சாந்தம்.

674 ¹சினைதையே யயோத்தி நாமம் பறவைவேந் தன்று மாகும்;
பனுவலே கிளவி நூற்பேர் பகர்செய்யு டனைத்தும் பண்ணும்;
தனுவுடல் கால நுட்பம் தரிக்கும்வில் லோரா சைப்பேர்;
மனுவொரு வேந்தன் ²சொல்லா மந்திர மனிதற் கும்பேர். (எ)

675 கூனலே பணில மாந்தை கோண்பிறை பருந்தே யைம்பேர்;
பானல்கள் பழனம் நெய்தல் வெற்றிலை பாவை வாசி;
மானலே மயக்க மொப்பு வருமிலச் சைப்பேர் வைக்கும்;
ஏனல்நெற் கதிரே யாதி புனந்தினை யிசைமுப் பேரே. (அ)

676 கானமே யிசைகான் வானம் பாடிதேர் மேசை காட்டும்;
பீனமே பெருமை பாசி பீடுடன் பேடி யூராம்;
ஆனகந் தேவ தாருப் படகந் துமியு மப்பேர்;
ஞானமே யறிவு கல்வி; நனந்தலை நநிவுச் சப்பேர். (௯)

677 ஈனமே நடலை தேய்த விழிவுடன் ³புயலே நாற்பேர்;
⁴கானமே பூசும் பூச்சு நாறுங்கத் தூரிக் குப்பேர்;
தானமே யீனக ருன்றல் துவைறநிச் சயமெண் ⁵ணைய்ப்பேர்;
பானமே குடித்தல் கள்ளாரம்; பவித்தல்வான் பொழிதல் வீதல் ()

678 ஆனென்ப திடைச்சொல் லாவாம்; அனிலனே ரவுணன் காற்றும்;
வானென்ப விசும்பி னெச்சம் வலிமுகில் பெருமை விண்ணும்;
தேனென்ப நறவுமவ் வண்டுந் திருதிப்பெண் றறைதன் முப்பேர்;
மீனென்ப வுடுமச் சப்பேர்; வென்றிசேர் துர்க்கை வெற்றி. (௧௧)

679 அன்னமே கவரி மாவு மடிசிலோர் புள்ளு மாகும்;
கன்னமே செவிக ளாப்புக் கன்னக்கோல் பொன்செய் தட்டார்;
சின்னமே யூதுஞ் சின்னஞ் சிறுமைசில் வான முற்றில்;
தன்னமான் கன்றே யற்பம்; தானவ னசுரன் றிங்கள். (௧௨)

680 முன்னலே நினைவு நெஞ்சம்; முன்னஞ்சீக் கிரிபெண் ணாப்பேர்;
⁶துன்னலே செறிதல் சேர்தல்; ⁷தோன்றிசெங் காந்தள் நெல்லி;

---

(பி-ம்.) ¹வினிதை. ²கொக்லவ. ³முயல்வெள் ளிப்பேர். ⁴கானமே பூச்சொ முக்கம் கத்தூரி கவரி நன்னீர். ⁵ணம்பேர். ⁶துன்னலே செறிதல் சேர்த லுழுதற்குஞ் சொல்லற் பாற்றும். ⁷தோன்றியே யுதிர நெல்லி சொற்றசெங் காந்தட் கும்பேர்.

கன்னல்நா ழிகைகு டம்நீர் ழிக்கவட்டிற் கரக மிக்காம்;
பன்னலே பருத்தி பேசல் பனுவல்பாச் செறிவு மாமே. (கஙு)

681 ஆனியே சேத மூல நாளொரு மாத மும்பேர்;
வானிசே னைமேற் கட்டி வார்துகிற் கொடியே மூப்பேர்;
மோனியே மவுனி யோகி; முன்பாற்றல் பெருமை மூன்பாம்;
கூனியே பெட்டாண் டிற்பெண் கோணல்கை தைக்கும் பேரே. ()

682 மோனையே யாப்பு றுப்பு முனையுமென் றறைபற் பாலாம்;
சேனையே படைக்க லப்பேர் வருதினி யெனவுஞ் செப்பும்;
சோனையே விடாம ழைப்பேர் திருவோண நாட்குஞ் சொல்லும்;
மானவர் வீரர் மாந்தர்; வானவன் பிரமன் சேரன். (கஙூ)

683 மன்னென்ப மிகுதி வேந்தன் வழுத்துமோ ரசைநி வப்பாம்;
பொன்னென்ப பொலி விரும்பு பொன்றிரு வியாழம் [1]பொற்பாம்;
கொன்னென்ப பெருமை காலம் பயம்பய னிலாமை கூறும்;
தென்னென்ப வனப்பி சைப்பேர் தெற்குமாங் கற்பி தாமே. (கஙா)

684 மன்னனே வியாழம் வேந்தன் வயம்குழத் திரட்டா திப்பேர்;
கின்னரம் நீர்ப்புள் யாழுங் [2]கின்னரற் கும்பேர் வைக்கும்;
பின்னகங் கொண்டை பின்னல்; பின்னைமா றேவி பின்றை;
நன்னர்மாட் சிமையே நன்மை; நன்மையுந் தமமே பிம்பம். ()

685. வன்னிதீ பிரம சாரி வண்கிளி சமியே பன்றி;
சென்னியர் பாணர் கூத்தர்; [3]தேனுவே காவொ டான்பேர்;
அன்னியங் குயில சற்பேர்; [4]ஆனமே சிவிகை நாவாய்;
சொன்னலே யிருப்பி னைஞ் சோளமென் பனவு மாமே. (கஙஎ)

686 அன்றிலோர் புள்மூ லம்நாள்; ஆனியம் பொழுதே நாளாம்;
குன்றெனிர் சதைய நாளே குறைபேவே தண்ட மூப்பேர்;
நொன்றலே பொறுமை தள்ளல் நிலைநிறுத் தல்று வம்பேர்;
மன்றலே பரிம ளப்பேர் ஒப்பனை வருகல் வியாணம். (கஙஅ)

687 அனந்தமே பொருளி லாமை யாவின்மை பொன்னு காயம்;
அனந்தன்மா லாதேனார் பாந்த ளருகனென் றோத னுற்பேர்;

(பி-ம்.) [1]வெய்யோன். [2]கிளத்தொரு தோற்றத் தும்பேர். [3]தேனுவே குதிரை கள்வர் செப்புறு பெருமை யாவாம். [4]யானமே.

அணங்கையோர் சத்தி பூமி; அணுக்கமே பயஞ்சோம் பென்றும்;
[1] அனங்கமல் லிகையிரு வாட்சி; அனலோன்றீ யானு மாமே. (௨௦)

688 முன்னென்ப பூருவப்பேர் மொழியு[2]மாக் கிரமும் பேசும்;
புன்மையே கீழ்மை யின்பேர் நிறத்திலோன் றெனவும் போற்றும்;
தொன்மையே பான்மை தன்மை சொற்றநற் குணமெ னும்பேர்;
பன்னகா சனன்வி வேந்தன் பரமேட்டி தானு மாமே. (௨௧)

689 [3]வனமப்புத் துழாயே சோலை வனப்புப்புற் றீமங் காடாம்;
கனவட்டம் பருதி வாசி; கன்றுத லீதல் கன்றல்;
பனைநுட்பம் பெருமை யானை பையித ழோர்மரப்பேர்;
மனைகட்டு மில்லை யில்லாள்; வான்மையே வெள்ளை தூய்மை. ()

690 மானேரே வதிநாள் மேனி மகரமோ டிருமை பெண்மான்;
கோனே[4]யாற் றல்சு வாமி பெருமைகோக் கொழுநற் கும்பேர்;
ஊனேசெம் புலவு நெற்பேர்; உன்மத்த மயக்கூ மத்தை;
நோனார்நோற் றிலர்மாற் றாராம்; நோன்மைநோன் பிருமை யாற்றல்.

691 மனோகர மழகி னுமை மகிழ்ச்சியோ டின்ப மும்பேர்;
பினாகியே யறகேச ராறே பிஞ்ஞகன் றானே முப்பேர்;
எனாதிமஞ் சிகன மைச்சன் றளநாதன் மறவ னென்றும்;
விநாயக னருகன் புத்தன் வெங்கரி முகத்தோ னுமே. (௨௪)

692 ஈன்றவன் பிரமன் பெற்றோன்; என்பேபுல் லெலும்பி ரண்டாம்;
மான்றலே மயக்கங் காற்றே வருகுற்றம் பெருமை நாற்பேர்;
தோன்றல்சேய் முலையே நாதன் றோன்முல்லைத் தலைவற் கும்பேர்;
ஆன்றலே மிகுதி யின்பே ரகலமாட் சிமையென் றாமே. (௨௫)

693 அனகனே பவங்க ணீத்தோ னையனே யருகன் முப்பேர்;
சனகனோர் முனியோர் வேந்தன்; சானுக்கற் புறமு முந்தாள்;
பனசமே மிருதி குன்றும் பலமுறந் தருப்பாந் தட்பேர்;
கனகனோ ரவுணன் புட்ப கவிமானன் விடையோ னமே. (௨௬)

---

(பி-ம்) [1]அனங்கமே புருவி லாமை யலர்மவ்வ லிருவாட் சிப்பேர். [2]மாத் திரமும். [3]வனமேநீ ரீமஞ் சோலை வளப்பாடா ரணியம் நாடே—பினமார்வன் மீகம் பைய வீர்ந்துழா யெண்பேர் வைக்கும். [4]யூற் றஞ்சு.

694 கனமேகஞ் செறிவு வட்டங் கார்முத்தக் காசு [1]பாரம்
தினமேவு பொன்னு நப்புத் திரட்சிசெம் மைபத் தேபேர்;
தனமேவெம் முலைபாங் கன்றே சாற்றுமுத் திரமே பொன்னும்;
இனமேநன் கிளைய மைச்சாம்; ஏனையே யொழிவி டைச்சொல். ()

695 கானலே நிறம்பேய்த் தேர்செங் கதிர்க்கிர ணங்க டற்சார்
வானநற் கரைதேஞ் சோலை மபானமுப் பளமா மேற்பேர்;
சானகி வேயே சீதை; தானைதூ சலிகங் கைவேல்;
ஏனமான் பன்றி யிப்பேர்; என்றாழ்காற் றிரவி வெய்யில். (௨௮)

696 மானமே மகிழ்சி லச்சை வலிகுற்றம் பெருமை தொன்மை
ஈனமி லளவி னோடே மான்மத மெனவெண் பேரே;
தானமே யிடஞ்சு வர்க்கந் தருகொடை மதம்நீ ராட்டாம்;
வானமா காய மங்கி மழையுலர் மரமு மாமே (௨௯)

697 கன்னியே தவப்பெண் துர்க்கை கன்னிகை யிராசி யாறொன்
றன்னுறு மிளமை நாம மழிவின்மை யொருதேழ் பேரே;
சென்னியே பாணன் சோழன் றிருப்பிர மகவ நிப்பேர்;
நன்னிலை நேர்கு கொம்பும் நகிற்புமுந் தகங்க லிலமு மாமே (௩௦)

698 மன்றமே தொட்சி மெய்ம்மை வாசமும் பலமே வீதி
நின்றகல் யானைத் தோடு வெளியென நிகழ்த்து மேற்பேர்;
கன்றுகை வளையே யற்பங் காட்டிய விளமை குட்டி;
நன்றேயுத் தமத்தி னும்மும் நல்லறந் தானு மாமே. (௩௧)

699 வடிவுயர் திடின கார வெதனையில் வழுத்த லுஞ் செய்யுட்
[2]படிபுக ழொன்றொ டேழுப் பாவெனப் பகரச் செய்தான்
துடியிடை மறமின் னாட்குத் தூய்மலர்க் கனியாய் நின்றோன்
அடியிணை யிறைஞ்சுஞ் செந்தி லருமருந் தையன் றானே. (௩௨)

700 இருமையொன் றியநி ருச்செந் தின்முரு கோனை யேத்தும்
அருமருந் தையன் சொற்ற வரும்பொருள் விளக்கங் கற்றோர்
பொருமுரண் டறப்ப டுத்தும் புலமைநாற் றிறம்வி ளக்கும்
திருமருங் குறப்பொ ருத்தஞ் செருக்குட னிருப்பர் தாமே (௩௩)

(பி-ம்.) [1]செப்பாங்-தினமேமெய். [2]படிபுக ழாறு றென்னப் பான்மையோர் துதிப்பச் செய்தான்—துடியிடை வள்ளி கேள்வன் சுந்தரச் செந்தில் வேலோன்.

[மீகை.] 1. கனியென்ப மதாம் பண்டு கனிந்திட லதுவு மாமே. 2. கிளையென்ப சிறுமை யேனல். 3. கானமே தமிழ் பொன் சாதி, 4. முன்னமே தொன்மை முன்பாம்; முன்னைமுன் னேன்றல் முன்னை. 5. வஞ்சி மஞ்சிகன்மங் கிரிதந்திரி மறவோ னென்றும்—கோணுமை தவஞ்செ யாமை துவன்றிடும் பொருமைக் கும்பேர்—மாணுசே மாக்க ளோறார் வள்ளல்மா தர்க்கு மாகும். 6. ஆனையே சிங்கம் வேழம்; அனலோன் றீ யானை யென்றும் 7. பூனையே புனுகு சவ்வா தனிக்குமா வெருகும் போற்றும்—கூனையே வேள்விக் குண்டங் கருப்பஞ்சா றடுகூ னும்பேர். 8. ஊன்றுகோ லேலூற்றுக்கோ லூனுவுகோ லழுங்கோற் கும்பேர்—சான்றவர் மிக்கோர் மெய்யோர் சாட்சிசொல் வோர்க்குங் கூறும். 9. நான்றல்கீழ் நோக்கல் தொங்கல்; நன்கேயுந் தமமி குத்தல். 10. இன்மையே குடிமை மிச்சை; என்றூழ்காற் றிரவி வெய்யில். 11. தன்மையே யியல்பி னுமை முடைப்பொரு ளதவுஞ் சாற்றும். 12. வன்னகை சாந்தி னுமம் வயங்குசந் தனமும் வைக்கும். 13. அணிமிகை பழியின் மைப்பேர்; அங்குலி யென்று மாகும். 14. புனிதனே றூர்வோன் றூயோன். 15. கனகமே பொன்கல் வெற்பாம். 16. பொன்னிகா விரிபூமின்பேர். 17. பன்னியே மனையா ளுமம் பகர்தற்கும் பகர லாமே.

ணகரவேதுகை முற்றும்.

---



# அரும்பொருள் விளக்க நிகண்டு.

## அநுபந்தம் 1.

### * பிரதிபேதம்.

### ககர வெதுகை.

1 பகவதியுமையேதுர்க்கைதருமதேவதைபேர்பன்னும்;
அகவலேபறைதலாடலான்றவாசிரியமுப்பேர்;.
தகவறிவேயொழுக்கந்தெளிவுசற்குணமேசாற்றும்;
முகவுமாளிகைமுகப்பேமொள்ளுதல்காந்திக்கும்பேர்.

2 உகமென்பவுரகம்பூமியூழியேமுதலேநாற்பேர்;
சுகமென்பகிளியேநன்மைசுவர்க்கமின்பஞ்சும்மாடே;
முகமென்பதிடமேதுண்டம்;மோகமேமயக்கங்காதல்;
நுகமென்பமகநாள்சோதிநாணுகத்தாணிமுப்பேர்.

3 அகலுளேபெருமைநாரேகலமென்றேறுதற்பேர்;
இகல்வலிபகைபோர்மேவல்;இருளையேதோழிநட்பாம்;
புகலுடல்குதிர்சொல்வெற்றி;பொக்கமேமிகுதிபொய்யாம்;
நகலொளிசிரித்தலின்பேர்;நகமேவெற்புகிர்மரப்பேர்.

4 அகமான்மாமனையுளுள்ளமகலம்வெற்புடனேபாவம்;
சகமேமானிலமேபாதிதகருடன்சட்டைநாற்பேர்;
புகமேபெண்ணின்சின்னப்பேர்வாலமுமதுவேபன்னும்;
மகமேயோர்நாள்யாகப்பேர்;வைகூர்மைவைக்கோல்பைம்புல்.

5 அகடென்பவுதரநாப்பணூன்றதீங்குரையேமுப்பேர்;
சகடென்பபொய்ம்மையோகஞ்சாகாடேபோர்ப்பறைப்பேர்;
பகடென்பகடாச்சேத்தந்திபஃறியேபெருமையைம்பேர்;
முகடென்பகோடிவிடங்கம்;மோக்கமேதீர்தல்முத்தி.

---

* பிரம்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள் உதவிய ஏட்டுப்பிரதியில் நூற்பாட முழுமையும் வேறுபட்டுள்ளது. ககரவெதுகைச் செய்யுட்கள் மட்டும் ஈண்டு உதாரணமாகத் தரப்பட்டுள்ளன.

6 அகழென்பவகழிதொட்டல்;அகிலமேசகமனைத்தாம்;
பகழியாசுகக்குழிப்பேர்;பகண்டைசில்லைப்புள்சிவேதை;
புகழென்பவகத்திவாகைபோற்றுறஞ்சீர்த்திமுப்பேர்;
சிகழிகைபயிர்முடிப்பேர்வாசிகைதிகழ்தேமாலை.

7 ஆக்கையேயுடலத்தின்பேர்யிற்கணைவீக்கும்பாசம்;
சேக்கையேமூலைதழும்புதிகழ்பாயல்கடகாசி;
சாக்கையேநிமித்திகன்பேர்பேயுண்டியதற்கேசாற்றும்;
தீக்கையோன்சிவனேயாசான்;சிகண்டிகேகயமலிப்பேர்.

8 ஆக்கமேபொன்செல்வம்பேறதிகம்பூமின்மெய்கேடாம்;
தூக்கமேநிவப்புத்தொங்கல்துயிலெனுமுப்பேர்செப்பும்;
பூக்கமேவவியினுமைப்புரியுடன்கமுகும்போற்றும்;
நோக்கமேயழகுபார்வைநொய்திலாவுயர்ச்சிக்கும்பேர்.

9 அகரமோரெழுத்தேசேரி;அகப்பாவேணகையுண்மேடை;
மகரமேயிராசிகாதல்மலர்த்தூளேசுறவேநாற்பேர்;
தகரமேமயிர்ச்சாந்தியந்தகரந்தண்மணம்புங்கின்பேர்;
ஒகரமோங்காரமஞ்ஞை;ஊகித்தனினைத்தலோர்ப்பாம்.

10 தகையேயோர்கவசம்பண்பேதளர்வன்பேபெருமைநீளம்;
சிகையேகீழ்மக்கள்பாறுசென்னியிற்கருவிக்கும்பேர்;
தொகையேயாசிரியங்கூட்டஞ்சோகமால்கவான்றிரட்சி;
நகையேபல்லொளிமலர்ச்சிநகையுடனிகழ்ச்சியைம்பேர்.

11 அகளமேமிடாவாழ்ப்பேர்;ஆகவம்புவிபோர்வாசி;
துகளென்பதூளேகுற்றம்;தொக்கேகூட்டந்துவக்காம்;
சகளிகூக்கருமுகைப்பேர்;சகோரமோர்புள்போத்தாங்கை;
உகளமேயிரண்டிடப்பேர்;ஊக்கலேநினைத்தலூர்தல்.

12 மகடுபெண்குழலிசைப்பேர்;மகன்மைந்தன்புருடன்மாக்கள்;
தகடிலையமைக்கும்பேர்;தக்கையோர்பறையேதெப்பம்;
முகடியென்பதுமூதேவிமுழுமகன்றனக்கும்பேசும்;
மகுடமேமுடியுறுப்பாமவுலியென்றிரண்டுமாமே,

13 தகைமையேகுணமேயாட்சிசீர்ன்றாண்மையெனவேழுப்பேர்;
புகையென்பதூமங்காதம்;பூக்குதனிணைத்தல்தோன்றல்;
திகைதிசைசுணங்கிஞமம்;சேகென்பவயிரமாசாம்;
பகையிகலடித்தல்சாதல்;பகர்தலேவிற்றல்பேசல்.

14 அக்கெனுநாமஞ்சங்கமம்பகம்விடைட்மூரிப்பாம்;
நக்கனேவிடையோன்பிண்டிநாதனிர்வாணிக்கும்பேர்;
பக்கணம்வேடர்வீதிபட்டணஞ்சிற்றூர்மூப்பேர்;
தக்கனெண்பாம்பிலொன்றுஞ்சரோருகன்மகவுமாமே.

15 எக்கலேயூர்தியேறல்சொரிதலென்றிரண்டுமேற்கும்;
சிக்கலேயிளைத்தலின்பேர்கிடைத்தலுந்தடையுஞ்செப்பும்;
ஒக்கலேகுடிசுற்றப்பேரொப்புறலதுவும்போற்றும்;
மூக்கோலந்தணர்தங்கைக்கோல்சிராவணநாண்மொழிப்பேர்.

16 ஆகமேகாயமார்பம்;அகர்பெருமரமகிற்பேர்;
யோகமேதியானங்கூட்டமுச்சாயம்போர்க்குபாயம்;
சாகமேதாழைதேனீதேக்குசாகினிவெள்ளாடாம்;
காகமேயரிட்டங்கீரிகற்பகம்விடநாற்பேரே.

17 மேகராகப்பேரோர்பண்மிளிர்சிறுக்கீரைக்கும்பேர்;
மாகதராடல்பாடல்வல்லோர்மற்றொருதேயத்தோர்;
கேகயமசுணமஞ்ஞைகிளர்ந்தபாட்டோர்தேயம்வில்;
பாகனேவலவன்புந்தி;பக்கியேகுதிரைபல்புள்.

18 வேகமேயகறல்கோபம்விரைவுடனுடம்பேகீழாம்;
பூகமேதிரட்சிகூந்தற்பூகம்பூங்கமுகும்போற்றும்;
கோகமேயற்பகேமிக்குருகென்றுங்கூறற்பாலாம்;
மாகமேபடையெழுச்சிவானன்றலைதிருவாழ்வைம்பேர்.

19 நோக்கலேகாத்தலின்பேர்காணலுநுவலற்பாற்றே;
பாக்கிடைச்சொற்றுவர்க்காயெதிர்காலப்பண்பேமுப்பேர்;
போக்குரைநடத்தல்குற்றம்பொய்பதடிப்பேரொன்ப;
மீக்கோளேறுதலினும்மேற்போர்வைபொலிவுமாமே.

20 ஆகரங்கடலேயாகமார்ந்திடுமுண்வேமுப்பேர்;
சீகரங்கரகம்வீசுதிவலைவெண்கவரிக்கும்பேர்;
சாகரந்துயிறணத்தல்தண்கடலெனவுஞ்சாற்றும்;
சேகரஞ்சிகரந்தேமாசெம்பொன்மாமவுலிக்கும்பேர்.

21 சாகினிசேம்புசாகம்;சகியென்பபொறைசேடிப்பேர்;
போகில்கொப்பூழ்பூமொட்டுப்புட்பொதுவெனவும்போற்றும்;
கோகிலமுட்டுளைப்பேர்குயில்பல்லிகுரக்குஞ்செப்பும்;
போகியிந்திரனேபாந்தள்;புகுதியேவருவாய்வட்டை.

22 அகறலேகுதித்தலோர்ப்புக்கழிவுடனகலநாற்பேர்;
சிகரிகோபுரமேநாரைசிரெலிவரைகிரீடம்;
இகரமோரெழுத்தேசந்தம்;ஏகலேபோதல்நாவாய்;
ககனம்விண்படைகான்பல்புள்;ககமேவெங்கணைபுள்ளாமே.

23 இக்கென்பகரும்பினுமமிர்தமோர்கள்ளுக்கும்பேர்;
குக்குடங்கோழியின்பேர்சிறகுடைப்பாந்தள்கூறும்;
சிக்கமேகுடுமியுச்சம்சிறையுறியோர்புள்சீப்பாம்;
சுக்கையேயுடுதேமாலை;சுகியேபுள்சுகமாமே. ×

24 நக்கலேயொளியேசொன்றிநகைத்திடலுடனுண்டற்பேர்;
மொக்குளேபுற்புதப்பேர்குமிழ்ப்புப்பூமுகையென்றாகும்;
கைக்கிளையாழ்நரம்போர்பாவொருதலைக்காமப்பேர்;
வக்கிரங்கொடுமைமீளன்மடங்கல்போய்நிமிர்தல்வட்டம்.

25 மகிணனேகொழுநனுமமருதத்தின்றலைவனைக்கும்;
சகுனமேகிழங்குநாரைசாற்றியநிமித்தம்புட்பேர்;
மகின்மேபுளிமாநாயேகவரிமாவனப்புணீர்நாய்;
சகுனிபுணிமித்தம்பார்ப்போன்; சகுந்தமீன்பொதுப்புள்பூகம்.

26 அகியராவிரும்பினுமம்; ஆகாரம்வடிவநெய்யூண்;
திகிரியேவட்டமாழிதேருருள்தேர்யாழ்வெற்பாம்;
துகிரிகைபூசுஞ்சாந்தேசொற்றசித்திரமேயென்றும்;
செகிழியேசிலம்புதீயேநெருப்பிலங்குறுங்கொள்ளிப்பேர்;

27 துகிலிகையெழுதுகோலேசொற்றுகிற்கொடியெனும்பேர்;
வகிர்வகிர்ந்திடலேவாராம்; வகுப்பென்பதெழில்வர்க்கப்பேர்;
சிகிபரிபுரமேமஞ்ஞைதீதுறுகேதுத்தீயாம்;
சுகிருதமறநெய்நன்மை; சுகன்முனிசுவர்க்கத்துற்றோன்.

28 மேகலையுடுத்தவாடைவிளங்கரைப்பட்டிகைப்பேர்;
பாகலேபலாவினுமம்பகர்காரவல்லிக்கும்பேர்;
போகலேபொலிவுநீளமளவின்மையதற்கேபோற்றும்;
சூகலந்தகரினுமம்சமர்செய்பூமிக்கும்பேரே.

29 வாகுவேயெழிறோள்காமம்; மகிழேயோர்மரங்களிப்பு;
ஆகுவேயெலிகொப்பூழுமாம்பெருச்சாளிக்கும்பேர்;
காகுளிசிற்பூட்டோசைகளத்தொலிதவிசேழுப்பேர்;
ஆகுலமொலிநடுக்கம்; அகலிகைபுவியோர்பெண்ணும்.

30 வீக்கென்பவிசித்தலின்பேர்மிகுதியேயோர்கணிப்பாம்;
தேக்கென்பகழுகோர்தாருத்திகழுளத்தெகிட்டற்கும்பேர்;
தாக்கென்பசமரேவீரம்; சாகையேசினைவேதப்பேர்;
மேக்கென்பமேற்கேமேலாம்; மிசையேவேதனைதுயிற்பேர்.

31 மாகதியதிகவேகமதிமதுரப்பேர்வைக்கும்;
சாகசம்வழக்கம்வீரஞ்சத்துவங்களிறேநாற்பேர்;
போகரேமுனிவீரர்ப்பேர்புணர்ப்புயர்விடரும்போற்றும்;
.... .... .... .... .... ....

32 சகுலிமீனெலியாம்; காகோதரம்பாம்போர்புண்மோடின்பேர்;
குகுமதிமறையிராவேகுலவுமோர்நாடிக்கும்பேர்;
புகுடியேபணிகலனபேர்பொற்புயர்புரூருப்போற்றும்;
வெகுளியேயடங்காமைப்பேர்வெஞ்சினமதுவுமாமே.

33 தொகுதியேநெருக்கங்கூட்டஞ்சொற்றிடுந்திரட்சிமுப்பேர்;
பகுதியேகொடிப்படைப்போர்பகுத்திடல்பகுதிகூட்டம்;
தகுதியேபொறையொழுக்கஞ்சாற்றறிவென்றும்போற்றும்;
நகுலியேகீரியோர்நோய்; நகாயுதங்குரங்கேசிங்கம்.

34 சக்கிரிநெடுமால்வேந்தன்சங்கப்பம்வெள்சதலிசெக்கான்;
மிக்கவைநிறைதனியாயமலதனூணடிசின்மேவும்;
கொக்கயஞ்செங்காய்மூலம்குரண்டமாக்குருக்கத்திப்பேர்;
சொக்கொளிர்பொன்னேசேர்வேசொல்லருமெழின்முப்பேரே.

35 புகரென்பவொளிகேழ்குற்றம்புற்கென்றலெழின்மழைக்கோள்
பகர்குன்றினருவிசொன்றிபற்றுயிர்கொன்பான்பேர்;
தகரென்பவகிலமாடுதகர்த்தலென்றேறுதன்முப்பேர்;
மகரந்தந்துணர்தேன்வண்டாம்; வாகதநூல்கள்ளாமே.

36 உக்கமேமருங்கின்பக்கமொண்மருங்காலவட்டம்
குக்குடஞ்சரவிசெந்தீகோவிடைமுகமேழ்பேராம்;
பக்கமேயருகுநட்புபறைதிதியடைக்கலப்பேர்;
வொக்கமேபகலமற்பமொழிவுறுப்பொலிவுமாமே.

37 சக்கரம்பெருமையோர்புள்தரணிதேருருளேயாழி
மிக்கருவரையேவட்டமிளிர்நகைபிறப்பொன்பான்பேர்;
கொக்கரைவளையேசங்கேகுதைவில்வெம்பணியேநாற்பேர்;
அக்கரமெழுத்தினுமமயருநோயொன்றுமாமே.

38 ஊக்கமேவலிதாளாண்மையுளமிகுத்திடலேயுண்மை
நீக்கமில்விரிவுயர்ச்சியாறமேநிகழ்ந்தநாமம்;
பாக்கமேபுறம்பணைக்காம்பதிநெய்தற்பதிபேரூராம்;
சூக்கமேசுரும்பேயற்பம்; சோகேபெய்பேய்ச்சோறுமே.

39 பகலேயோர்முகூர்த்தநாளேபலபாடேநடுவேதசு×
பகலவன்செயலேபாகுறுகத்தாணியொன்பானேபேர்;
அகலமார்புடனேபூமிவிரித்துவையகலநாற்பேர்;
இகலனேநகுலமோரி; ஏகமொன்றுயர்ந்தமுத்தி.

40 தோகையேவால்முந்தானைசுற்றால்தூவிமஞ்ஞை
வாகைசேரெழிற்பத்தாகைமயிற்பீலியுடனேயேழ்பேர்;
ஈகையேகொடைகாற்றுப்பொன்; இண்டைகற்பகமில்லாமை;
ஓகையேவருவசொல்லுவகைக்கும்புகலலாமே.

41 சிகரமேருவட்டினுச்சிதிவலைவெற்புட்டனேசென்னி
எகினமாக்காக்கைதெண்ணீரெறிதிரையென்றேழ்பேராம் ;
பகவனீசன்மால்புத்தன்பங்கயன்சினனொடைம்பேர் ;
நிகர்தலேநிறைதலொப்பாம் ; நெகிழ்தலேகுறைவுவிள்ளல்.

42 பொருட்டென்பமுளரிப்பைம்பொற்பூங்கொட்டைதுளையுஞ்சேற்றி
மிருத்திடுங்கொப்புணீண்டமால்வரைவிளங்குமுப்பேர்; [ன்
பகுத்திடல்பாதிசெய்தல்தறித்திடலென்றும்பாற்றே ;
இகழ்ந்தல்காழ்த்தல்நெருக்கமெறிதலேகடத்தலும்பேர்.

43 பாகமேபாதியின்பேர்பலகடனோர்கணிதம்பிச்சை
வேகமார்பதம்பட்டாடைவிளங்குநாமங்களாகும் ;
சூகரங்கரமேபன்றி ; துகிரேசெம்பவளஞ்சேப்பாம் ;
நாகரந்திசைச்சொல்நொள்ளை ; நகுதலேசிரித்தல்பேசல்.

44 கைகரம்படையுறுப்புக்கருத்துடனொழுக்கந்தங்கை
மெய்விடமொப்பனைப்பேர்மிளிர்கீழ்மைசார்பொன்பான்பேர் ;
மைகறைமேகமாடுமலடேயஞ்சனங்குற்றப்பேர் ;
வைகல்வைகறைநாடங்கலுரியனகழிவுமாமே

45 கோகனகஞ்சரோரங்குளிர்கையாந்தகரைவெய்ய
மோகஞ்செய்நிலக்கடம்பென்றுரையபிதானமூன்றும் ;
பாகவன்றழல்தீத்தேவாம் ; பாகர்கண்மதில்சூதர்க்காம் ;
சூகையென்பதுவேயானைசொற்றசிற்றிற்கும்பேரே.

46 இருத்தலேயழைத்தலீதல்எறிதலேசெருத்தல்வீழ்த்தல்
மிகைப்படத்துகைத்தல்தாழ்த்தல்வருந்திடல்விளம்பெண்போம் ;
அலைத்தலேநோயொடித்தல்அறுத்திடலுடனுயர்த்தல்
வகைப்படுமெழுச்சிமோதல்வழுத்துபேரிருமூன்றுமே,

47 நாகமேகுரங்குபுன்னைஞாழல்வெற்பியானைதூசு
மாகங்காலகிகாரீயம்வருசொர்க்கம்பன்னொன்றேபேர் ;
ஊகமேகருங்குரங்கேயுடற்குறைவிலங்கின்கூட்டம்
போகிலாத்தர்க்கஞ்சங்கைபொருபடைவெங்கையேழ்பேர்.

48 பர்கென்பபருப்புப்பாக்குபர்ணிபர்ல்பகிர்ச்சிபாகன்
பாகஞ்சர்க்கரையாறுணம்பரைகரையீராறேபேர் ;
நாகென்பசங்குகாரணத்தையானீர்வாழ்சாதி
மோகங்கொள்பெண்பாலீறுவிளமைமுண்மரமெண்பேரே.

49 வாகையேதிற்றுயற்சிவனட்பியர்வெற்றிசால்பு
ஈகைநல்லொழுக்கங்கல்வியியலறத்துறையேயுண்மை
ஓகைசேர்மிகுதிபண்பேயொருமரமருந்தவங்கள்
மோகமார்பேர்மூவைந்தாம்; முகையேநீர்மிடாப்பூமொக்குள்,

50 தூக்கென்பவெரீஇபாண்கூத்துத்துலாந்தொங்கலயலாராய்தல்
தூக்கணங்குருகேபாரஞ்சொற்றிடுமுவமைவிற்றல்
நீக்கமினிவப்பேபண்டநிறுத்திடலுணர்த்துமாசான்
ஆக்கியசிக்கமென்னுமபிதானமூவைந்தாமே.

51 வழுத்துயிர்மெய்மூவாறின்வருகின்றககரமாதி
யெழுத்தெதுகையினிற்செய்யுளாம்பாவென்றிசையச்செய்தான்
பழுத்தசெஞ்சுடர்வேலாற்சூர்பகவெறிந்தோன்பொற்பாதம்
அழுத்துறமிதையன்செந்திலருமருந்தையன்றனே.

ககரவேதுகை முற்றும்.



# அரும்பொருள் விளக்க நிகண்டு.

## அனுபந்தம் II.

# அரும்பொருள்விளக்க நிகண்டு.

## அநுபந்தம் III.

### மிகைப்பாடத்தின் சொல்லகராதி.

[(பி-ம்) என்றதனையடுத்துள்ளன செய்யுளெண்கள். பிற எண்கள் பக்கங்களைக் குறிப்பன.]

# பிழைதிருத்தம்.



| செய்யுளெண். | பிழை. | திருத்தம். |
|---|---|---|
| 88 (பி-ம்) 4. | சாற்றடியாட்கு மேற்றும் | சாற்றடியாட்கு மேற்கும் |
| 104 (பி-ம்) 7. | கவசமூற்றும் | கவசமுற்றும் |
| 121 | அடலேபோ | [4]அடலேபோ |
| 122 | 22 | 122. |
| 133 (பி-ம்) 5. | கடளேயுள்ளுதல் பின் | கடனேயுள்ளுதல் பின் |
| 136 (பி-ம்) 2. | யேற்றல் | மேற்றல் |
| 166 | துடாவென்ப | துடர்வென்ப |
| 193 | இண்டையேபதுமம்மாலை | இண்டையேபதுமம்மாலை; |
| 198 | தோணிரேவதிநாளோடம்; | தோணிரேவதிநாளோடம் |
| 288 | துந்துமி | துந்துபி |
| 363 | ஐயேபெண் | ஐயைபெண் |
| 374 | வயறுரை | வயிறுரை |
| 403 (பி-ம்) 8. | பழவெழிற்பேர் | மழவெழிற்பேர் |
| 413 | நோய்கான்றுக்கம் | நோய்கான்றூர்க்கம் |
| 459 | பலங்கடம்போ; | பலங்கடம்போ |
| 481 | மூப்பெர் | மூப்பேர் |
| 508 | இயாலமே | யாலமே |
| 549 | ஐவராங் | ஐவராங் |
| 630 | மறல்பகைசமர்பிணக்கு ; | மறல்பகைசமர்பிணக்கு |

அநுபந்தம் II-ல் க முதல் அ பக்கம் வரை சொற்களுக்குப்பின் கொடுக்கப்பட்டிருக்கும் எண்களின்மேல் பக் என்றிருப்பவற்றைச் செய் என்று திருத்திக்கொள்க.

